

# அருவியூர் நகரத்தார் குரல்


திங்கள் இரண்டுக்கு ஒன்று

கல்வி பண்பாடு வளர்ச்சி இதழ்

ஆண்டு 25 - 153

பிளவ - சித்திரை

மே-ஜுன் 2021


39 வது

## கல்விக்காவலர்



தெய்வத்திருவாளர்கள்.

**செம்பூதி. தே.மா. சுப்பையா செட்டியார் - திருமதி பூங்கோதை ஆச்சி**

தங்களது பெற்றோரை கல்விக்காவலர்களாக்கி பெருமை சேர்க்கும் தவப்புதல்விகள்

**திருமதி M. மாலதி D.Pharm. - திரு. PL. முருகேசன்**

ஸ்ரீ முருகன் மெடிக்கல்ஸ், N.G.G.O. காலனி, கோவை-22.

**திருமதி S. ஜெயந்தி - திரு. A. சண்முகநாதன்**

நாகம்மாள் நோட் புக்ஸ், செல்வபுரம், கோவை-26.


வெளியீடு

அருவியூர் வடக்குவளவு நகரத்தார்

கல்வி வளர்ச்சிக் கழகம் (பதிவு)

பிரான்மலை

உ
நமது சமூகத்தின் கல்வி வளர்ச்சியே எமது தலையாய குறிக்கோள்

உதவுவோம்! பண்படுத்துவோம்! பாராட்டுவோம்!

**பட்டம் பெற்றுத் தொழிலிற் சிறப்போம்!**

# அருவியூர் நகரத்தார் குரல்



அலைபேசி : 63744 59670

ஆண்டு 25
குரல் 153

ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப்பு உடைத்து - குறள் 398

மே-ஜுன் 2021
பிலவ-சித்திரை



கடிதம், செய்திகள், படைப்புகள் இவற்றை
அனுப்ப வேண்டிய முகவரி :
அருவியூர் நகரத்தார் குரல்,
அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகம்,
3, முதல் குறுக்குத் தெரு,
அழகப்பா காம்ப்ளெக்ஸ் பின்புறம்,
பொன்னமராவதி,
புதுக்கோட்டை - 622 407.
avnkalvi@gmail.com
suryaprint1998@gmail.com

## கல்வி வளர்ச்சிக் கழக அறிவிப்பு

**2021-22** கல்வி ஆண்டிற்கான பள்ளி மற்றும் கல்லூரி மாணவ மாணவிகளுக்கு வழங்கப்படும் **இலவச கல்வி உதவித் தொகை** மற்றும் கல்விக் கடன் ஆகியவற்றுக்கான விண்ணப்பங்கள் **15-07-2021** முதல் **ஆன்லைன் மூலமாக (Email / Whatsapp) வழங்கப்பட உள்ளது** என்பதை தெரிவித்துக் கொள்கின்றோம்.

விண்ணப்ப படிவங்களுக்கு கல்வி வளர்ச்சிக் கழக செயலாளர் **திரு. சுப. செல்வம்** அவர்களை **94444 68900** என்ற எண்ணில் தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

**- தலைவர், கல்வி வளர்ச்சிக் கழகம்.**

# உள்ளடக்கம்

தலைவர் சிந்தனை



**செ. ஆசை அலங்காரம்** B.Sc.,
தலைவர்
**மக்கள் சேவையே மகேசன் சேவை**

**நற்குடிகள் நாலாயிரம் வழிவந்த நகரத்தார் பெருமக்களே!**
**வணக்கம்.**

உலகை வாட்டி வதைத்த சார்வரி நிறைவு பெற்று நலங்கள் பல நல்கிட பிலவ ஆண்டு பிறந்து விட்டது. பிலவ ஆண்டிலாவது நோய்நொடிகள் நீங்கிடவும், கழுபிணி இல்லாத உடலையும், துன்பம் இல்லாத வாழ்வும் அனைவரும் பெற்று இன்புற்று வாழவும் இறைவன் அருள்புரிய வேண்டி வணங்கி, **கல்வி வளர்ச்சிக் கழகத்தின் சார்பில் தமிழ் புத்தாண்டு வாழ்த்துக்களை தெரிவித்துக் கொள்கின்றேன்.**

2018-2021 மூன்று ஆண்டு காலம் கல்வி வளர்ச்சிக் கழகத்தின் தலைவராக சேவையாற்றிய காலம் மனநிறைவையும், மகிழ்ச்சியையும் அளித்தது. அதற்கு நல்ல நேர்மையான தன்னலமற்ற சேவை மனப்பான்மை கொண்ட, செயல்திறன் மிக்க செயலாளராக திரு சுப. செல்வம் அவர்களும், நிதி பாராமரிப்பை நன்கு அறிந்த பொருளாளர் திரு சே. சந்திரசேகர் அவர்களும், நல்ல ஆலோசனைகளையும், பெரும் நிதி உதவிகளையும் கேட்ட பொழுதெல்லம் வாரி வழங்கிய மாபெரும் கொடை வள்ளல்கள் திரு A.P. ஸேதுராமன் அவர்களும், திரு சொ. ராமநாதன் அவர்களும் இணைத் தலைவர்களாகவும், நல்லவர்களின் மனங்களிலே நாணயத்தையும், நற்பண்புகளையும் விதைத்த நல்ல பண்பாளர் திரு பொன். சிவஞானம் அவர்கள் துணைத்தலைவராகவும், திருவாளர்கள் செந்தில் செல்வம், பெ. சிவன்ஜோதி, சி. அருணாசலம், மா. சுவாமிநாதன் ஆகிய நிர்வாகக்குழு உறுப்பினர்களும் அமையப்பெற்றதேயாகும். கடந்த மூன்று ஆண்டுகால நிர்வாகம் சிறப்பாக

அமையப்பெற்றதற்கு முக்கிய காரணங்களாகும். அதற்காக அவர்கள் அனைவருக்கும் என் பணிவான நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆண்டுதோறும் நன்கொடைகள் வழங்கிவரும் மாபெருங் கொடை வள்ளல் பெருமக்கள், பெருங்கொடை வள்ளல் பெருமக்கள், வள்ளல் பெருமக்கள், புரவலர்கள், 9 ஆம் வகுப்பு முதல் 12-ஆம் வகுப்புவரை படிக்கும் மாணவர்களுக்கு உதவித் தொகை வழங்கிவரும் நன்கொடையாளர்கள் மற்றும் கல்விக்காவலர்கள் மாணவர்களை ஊக்குவிக்க தங்கம் மற்றும் வெள்ளிப்பதக்கங்கள் நன்கொடைகள் அளித்துவரும் வள்ளல் பெருமக்கள் அனைவருக்கும் நிர்வாகத்தின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். மேலும் ஆண்டுதோறும் 6-8 வகுப்பு மாணவர்களுக்கு உதவித் தொகை வழங்க நன்கொடை அளித்துவரும் பொதுநலச் சங்கத்திற்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

நிரந்தரவைப்புநிதிகளுக்கு வங்கிகள் வழங்கும் வட்டி சதவீதம் குறைந்துவிட்டதால், நிரந்தர வைப்புநிதிகள் மூலம் கிடைக்கும் வட்டி வருவாய் குறைந்து விட்டது. நன்கொடையாளர்களிடமிருந்து பெறும் நிதி, வங்கியிலிருந்து கிடைக்கும் வட்டி ஆகியவற்றை கொண்டுதான் மாணவச் செல்வங்களுக்கு கல்வி உதவித்தொகை ஆண்டுதோறும் வழங்கி வருகின்றோம்.

தற்சமயம் நாம் வழங்கும் உதவித் தொகையானது யானைப்பசிக்கு சோளப்பொறியை வழங்குவது போல் மிகவும் குறைவாக உள்ளது. இதனை உயர்த்தி வழங்க வேண்டும் என்கிற சிந்தனையும், விருப்பமும் எங்களிடம் நீண்ட காலமாக உள்ளது. அதனை செயல்படுத்துவதற்கு நகரத்தார்கள் பெருமக்கள், வசதி படைத்தவர்கள் தங்களால் இயன்ற பொருள் உதவியாக ஆண்டுதோறும் ரூ.1000/- நன்கொடை வழங்கி புரவலராக வேண்டுமாய் கேட்டுக்கொள்கின்றேன். மேலும் ஒவ்வொரு சங்கமும் தங்களின் நிதி நிலைக்கேற்ப

ஆண்டு தோறும் ஒரு தொகையை நன்கொடையாக வழங்குவதும் மிகவும் சிறப்பாக அமையும். **இது தவிர வசதிபடைத்தவர்கள் ஏழை மாணவர்களின் நலனைக் கருத்தில் கொண்டு உதவித்தொகை கோரி மனுச் செய்யாதிருக்க வேண்டுமாய் பணிவோடு கேட்டுக் கொள்கின்றேன்.** நீங்கள் விட்டுக் கொடுக்கும் நிதியானது ஒரு ஏழை மாணவனின் வாழ்க்கையை பிரகாசிக்கச் செய்யும் என்பதை மனதில் நிறுத்தி, இதனை நீங்கள் செய்யும் ஒரு பெரிய தருமமாக கருதிட வேண்டுமாய் கேட்டுக் கொள்கின்றேன். ஒவ்வொரு சங்கத் தலைவர்களும், சிபாரிசு செய்பவர்களும் இதனைக் கருத்தில் கொண்டு செயல்பட்டால் மிகவும் நலமாக இருக்கும். ஏனெனில் உங்களின் பரிந்துரைகளுக்கு மிகுந்த மரியாதை உண்டு. நீங்கள் பரிந்துரை செய்யும் அனைவருக்கும் உதவித்தொகை வழங்கப்பட்டு வருகிறது. இந்தத் திட்டம் சிறப்பாக செயல்படுத்தப்படுவதற்கு உங்கள் அனைவரின் உதவியும், ஒத்துழைப்பும் மிகவும் அவசியமானதொன்றாகும்.

மேலும் கல்விக்கடன் பெற்று இதுவரை செலுத்தாதவர்கள் உடனடியாக செலுத்திட வேண்டுமாய் மீண்டும் கேட்டுக் கொள்கின்றேன்.

ஆதரவற்ற, வறுமையில் வாடும் ஏழை மாணவர்களை கல்வி வளர்ச்சிக் கழகமே தத்தெடுத்து அவர்களின் கல்விக் கட்டணம் (Tuition Fees) முழுவதையும் கல்வி வளர்ச்சிக் கழகமே ஏற்றுக்கொள்ளலாம் என்றும், அதற்கு நிதி உதவியாளர்கள் (Sponsors) கிடைத்தால் அதனை வரவேற்று ஏற்றுக்கொள்ளலாம் என முடிவு செய்தோம்.

எங்கள் நிர்வாகத்தின் வேண்டுகோளை ஏற்று மாபெருங் கொடைவள்ளல் **திரு. A.P. ஸேதுராமன்** அவர்களும், அ.வ.ந. பொதுநலச் சங்க இணைத் தலைவர் **திரு. G. இளங்கோவன்** அவர்களும், கல்வி வளர்ச்சிக் கழக செயலாளர் **திரு. சுப. செல்வம்** அவர்களும் முன்வந்தார்கள்.

அதன்படி, கல்லம்பட்டியைச் சார்ந்த **N. விக்னேஷ்,** B.A. Economics படிப்பதற்கான கல்விச் செலவை **திரு.A.P. ஸேதுராமன்** அவர்களும், ஆலவயலைச் சார்ந்த **அ. சாரதி,**

B.Sc. Viscom. படிப்பதற்கான கல்விச் செலவை பொன்னமராவதி கணேஷ் சாரீஸ் திரு. **G. இளங்கோவன்** அவர்களும், சிறுகுடியைச் சார்ந்த சிறுகுடி அரசுப் பள்ளியில் 9-ஆம் வகுப்பு படித்துவரும் வசதிவாய்ப்பற்ற குடும்பத்தைச் சார்ந்த செல்வி **M. மீனாட்சி** என்பவரின் கல்வி கற்க ஆகும் செலவை கல்வி வளர்ச்சிக் கழக செயலாளர் **திரு. சுப. செல்வம்** அவர்களும் ஏற்றுக்கொண்டுள்ளார்கள். மேற்கண்ட மூன்று மாணவச் செல்வங்களின் கல்விக்கட்டணம் முழுவதும் வழங்கப்பட்டு, அவர்களின் கல்வி தடைபடாமல் தொடர வழிவகை செய்யப்பட்டுள்ளது என்பதை மகிழ்வோடு தெரிவித்துக் கொள்கின்றேன்.

மேற்கண்ட இத்திட்டத்திற்கு நிதி உதவி அளித்த இம்மூன்று வள்ளல் பெருமக்களையும் என் சார்பாகவும், நிர்வாகத்தின் சார்பாகவும் மனதார வாழ்த்தி பாராட்டுகின்றேன். இம்மூன்று வள்ளல் பெருமக்களைப் போல் பல வள்ளல் பெருமக்கள் உருவாகி ஏழை மாணவர்களின் வாழ்க்கையில் ஒளிவிளக்கேற்றிடும் வகையில் உதவிக் கரம் நீட்டி ஆதரித்திட வேண்டுமாய் மிகவும் அன்புடன் கேட்டுக்கொள்கின்றேன்.

இதுவரை 39 கொடையாளர்கள் தலா ரூ.1,00,000/- வழங்கி கல்விக்காவலர்களாகத் தங்களை இணைத்துக் கொண்டு பெருமை சேர்த்துள்ளார்கள். நடப்பு கல்வி ஆண்டில் கல்விக்காவலர்களாக மேலும் 25 கொடையாளர்களை சேர்க்க வேண்டும். அதன் மூலம் கல்விக்காவலர்களின் எண்ணிக்கை உயர்த்திட வேண்டும் என திட்டமிட்டுள்ளோம்.

மீண்டும் 3 ஆண்டு காலத்திற்கு (2021-24) என்னை தலைவராகவும், செயல்வீரர் **திரு. சுப. செல்வம்** அவர்களை செயலாளராகவும் போட்டியின்றி ஒருமனதாக தேர்ந்தெடுத்தமைக்கு நகரப்பெரியவர்கள், பொதுக்குழு உறுப்பினர்கள் அனைவருக்கும் நன்றி தெரிவித்துக் கொள்கின்றேன். பொருளாளர் பதவிக்கு போட்டி ஏற்பட்டபொழுது **திரு. சுப. முத்து** B. Tech., அவர்களை போட்டியின்றி தேர்வு செய்ய பெருந்தன்மையுடன் விட்டுக்

கொடுத்த திரு. **சே.தவசீலன்** அவர்களுக்கும் எங்களின் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

இதே போன்று பொதுநலச்சங்க நிர்வாகிகள் தேர்தலிலும் போட்டி ஏற்படக் கூடிய சூழ்நிலை ஏற்பட்டபொழுது சமாதானப் பேச்சுவார்த்தைக்கு என்னோடு உதவியாக இருந்த **திரு. ந. கதிரேசன் செட்டியார், திரு.A.பெரியசாமி, திரு. பொன். சிவஞானம், திரு. G. மைனர் வெள்ளச்சாமி திரு.ந.சக்திவேல்** ஆகியோருக்கும், எங்களின் சமரசத்தை பெருந்தன்மையோடு ஏற்றுக் கொண்டு **திரு.M.S.முருகப்பன்** அவர்களை தலைவராகவும், **திரு.M.சாமிநாதன்** அவர்களை செயலாளராகவும், **திரு.S.மங்கைபாகன்** அவர்களை பொருளாளராகவும் போட்டியின்றி தேர்வு செய்ய உதவிய பொதுநலச் சங்கத் தலைவர் **திரு. Er.M.மாணிக்கம்** அவர்களுக்கும், அறங்காவலர் **திரு.N.மாணிக்கம்** அவர்களுக்கும், அமைப்புச் செயலாளர் **திரு.V.நேருதாசன்** அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

பொதுநலச் சங்க நிர்வாகத்திற்கும், கல்வி வளர்ச்சிக் கழக நிர்வாகத்திற்கும் எப்போதும் போல் தொடர்ந்து ஆதரவளித்து வளர்ச்சிப் பணிகளும், சேவைகளும் பெருகிட ஒத்துழைப்பும், ஆதரவும் வழங்கிட வேண்டுமாய் மெத்தப் பணிவோடு கேட்டுக் கொள்கின்றேன்.

# புதுமனை புகுவிழா

சிறுகுடி திரு. **பழ.ச. சக்திவேல் செட்டியார்-மல்லிகா ஆச்சி**
இவர்களின் மகன் திரு. **பழ.ச.பாலமுருகன்-தேவி**
தம்பதியினர், **சேலம் சின்ன திருப்பதியில்** புதிதாக கட்டியுள்ள
**"மயிலகம் இல்லம்"** புதுமனை புகுவிழா **15.02.2021**
திங்கட்கிழமை அன்று சிறப்பாக நடைபெற்றது.
உறவினர்களும், நண்பர்களும் கலந்துகொண்டு
சிறப்பித்தனர்.

**தகவல் : திரு பழ.ச. பாலமுருகன்,** சேலம்.

# அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகம்
# அருவியூர் வடக்குவளவு நகரத்தார் பொதுநலச் சங்கம்
# செயற்குழு கூட்டம் & புதிய நிர்வாகிகள் பதவி ஏற்பு விழா

22.04.2021 வியாழக்கிழமை அன்று பிரான்மலை மங்கைநாயகர் மன்றத்தில் காலை 9.30 மணி அளவில் செயற்குழு கூட்டம் நடைபெற்றது. முன்னதாக அறங்காவலர் **திரு. N. மாணிக்கம்** அவர்கள் தலைமையில் பொதுநலச் சங்க நிர்வாகிகள், புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பொதுநலச் சங்க மற்றும் கல்வி வளர்ச்சிக் கழக நிர்வாகிகள், நகரத்தார் பெருமக்கள் அனைவரும் ஆறாம் திருவிழா நாளான இன்று அருள்மிகு மங்கைநாயகர் - தேனம்மை, அருள்மிகு பைரவர் சுவாமிகளுக்கு அர்ச்சனை செய்து வழிபாடு சிறப்பாக நடைபெற்றது. பின்பு கும்பாபிஷேக நன்கொடையாளர்கள் கல்வெட்டு, சேமிப்பு சீட்டு கல்வெட்டு, நிர்வாகிகள் கல்வெட்டுகளை முன்னாள் தலைவர் **திரு. S. வேலாயுதம்** செட்டியார் அவர்கள் திறந்து வைத்தார்கள். முன்னாள் பொது நலச் சங்கத் தலைவர் தெய்வத்திரு **மு. சண்முகம்** செட்டியார் அவர்கள் திருவுருவப்படத்தை முன்னாள் தலைவர் **திரு. மு.ந. இராமநாதன்** செட்டியார் அவர்கள் திறந்து வைத்தார்கள்.

பொதுநலச் சங்கத் தலைவர் **திரு. M. மாணிக்கம் செட்டியார்** அவர்கள் தலைமையில் கல்வி வளர்ச்சிக் கழகத் தலைவர் **திரு. S. ஆசை அலங்காரம்** அவர்கள் முன்னிலையில் **திரு.V. கணேசன்** அவர்கள் இறைவணக்கத்துடன் செயலாளர் **திரு. ச. இராமநாதன்** அவர்கள் வரவேற்புரை நிகழ்த்த **திரு.M. இளங்கோவன்** அவர்கள் தணிக்கை அறிக்கை தாக்கல் செய்ய, செயற்குழு கூட்டம் நடைபெற்றது.

தொடர்ந்து முதியோர் மற்றும் ஆதரவற்றோர்களுக்கு உதவித் தொகை வழங்கும். வள்ளல்களுக்கு பொன்னாடை அணிவித்து பாராட்டப்பெற்றார்கள். அதேபோல தீபாவளி, பொங்கல் பண்டிகைகளுக்கு புத்தாடை, இனிப்பு, வழங்கிவரும் வள்ளல் பெருமக்களும் பாராட்டப்பெற்றார்கள். சேமிப்பு சீட்டு

நடத்திக் கொடுத்த பொறுப்பாளர்களுக்கு பாராட்டு வழங்கப்பட்டன.

அதனைத் தொடர்ந்து பிரான்மலை மங்கைபாகர் தேனம்மை திருக்கோயில் கும்பாபிஷேக மலரை கல்வி வளர்ச்சிக் கழகத் தலைவர் திரு. **S. ஆசை அலங்காரம்** அவர்கள் வெளியிட பொதுநலச் சங்கத் தலைவர் திரு. **M. மாணிக்கம்** அவர்கள் பெற்றுக்கொண்டார்கள். அடுத்து, பதவிஏற்பு விழா 2021-24 ஆண்டுகளுக்கு பொதுநலச் சங்க நிர்வாகிகளாக தேர்ந்தெடுக்கப்பட்ட, தலைவர் **திரு. M.S. முருகப்பன்** அவர்கள், செயலாளர் திரு.M. **சாமிநாதன்** அவர்கள், பொருளாளர் **திரு. S. மங்கைபாகன்** அவர்களுக்கு, முறையே தேர்தல் ஆணையாளர்கள் **திரு. S. ஆசை அலங்காரம்** அவர்கள் **திரு. சுப. செல்வம்** அவர்கள் **திரு. பொன். சிவஞானம்** ஆகியோர்களால் பதவிப் பிரமாணம் செய்து வைக்கப்பட்டார்கள்.

அதேபோல் கல்வி வளர்ச்சிக் கழகத்திற்கு 2021-24 ஆம் ஆண்டுகளுக்கு போட்டியின்றி தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவராக திரு. **S. ஆசை அலங்காரம்** அவர்கள் செயலாளராக **திரு. சுப. செல்வம்** அவர்கள், பொருளாளராக **திரு. S. முத்து** அவர்களுக்கு, முறையே தேர்தல் ஆணையாளர்கள் **திரு. Er. M.மாணிக்கம்** அவர்கள் **திரு. S. இராமநாதன்** அவர்கள் **திரு. S. மங்கைபாகன்** அவர்களால் பதவிப் பிரமாணம் செய்து வைக்கப்பட்டார்கள்.

புதிய நிர்வாகிகள் சார்பாக தலைவர். திரு. **M.S. முருகப்பன்** அவர்களும். திரு. **S. ஆசை அலங்காரம்** அவர்களும் ஏற்புரை நிகழ்த்தினார்கள். நன்றியுரை திரு. **V. நேருதாசன்** அவர்கள் நிகழ்த்த நாட்டுப்பண்ணுடன் கூட்டம் இனிதே நிறைவுபெற்றது.

**திரு. ச. இராமநாதன், செயலாளர்,**
**அ.வ.ந. பொதுநலச் சங்கம், பிரான்மலை.**

## பூவையருக்கான அரிய தகவல்

வெள்ளி ஆபரணங்களுடன் சிறிது கற்பூரத்தைப் போட்டு வைப்பதால் வெள்ளி ஆபரணங்கள் கறுப்பாவதைத் தடுக்கலாம்.

# கல்வி உதவித் தொகை பெற உதவும் இணையதளங்கள்



சுப. செல்வம்,
குரல் ஆசிரியர்

**அறிமுகம் :**

கல்விச்செலவை ஈடுகட்ட பெரிதும் உதவியாக இருப்பது உதவித்தொகைகள் தான். மத்திய, மாநில அரசுகள், தனியார் அமைப்புகள், நிறுவனங்கள் மாணவர்களுக்கு ஏராளமான உதவித்தொகைகளை வழங்கி வருகின்றன. ஆனால், அது எல்லோருக்கும் கிடைப்பதில்லை. ஏன்....? இவ்வாறான உதவித்தொகைகள் வழங்கப்படுவதைக் கூட பல மாணவர்கள் அறிவதில்லை. அப்படிப்பட்ட மாணவர்களுக்காகவே இந்த இணையதளங்களில் பள்ளிக்கல்வி முதல், வெளிநாட்டுப் படிப்பு வரை வழங்கப்படும் உதவித்தொகைகள் பற்றி அறிந்து கொள்ளலாம்.

**வலைதளங்கள்: www.scholarshipsinindia.com**

இந்தியாவிலும், வெளிநாடுகளிலும் கிடைக்கும் கல்வி உதவித்தொகைகள் பற்றி ஏராளமான தகவல்கள் இந்த இணையதளத்தில் கொட்டிக் கிடக்கின்றன. கல்வி தொடர்பான பரிசுகள், மாணவர்களுக்கான போட்டிகள், ஆய்வுப் படிப்புகள், இந்தியாவிலுள்ள பல்கலைக்கழகங்கள், தேர்வு முடிவுகளையும் இந்தத் தளத்தில் பார்க்கலாம். தினசரி தகவல்கள் புதுப்பிக்கப்படுகின்றன. கல்வி ஆய்வாளர்கள், நிபுணர்களிடம் மாணவர்கள் கேள்விகள் கேட்கலாம். உடனடியாக பதில் பெற்றுத் தருகிறது இந்தத் தளம்.

**www.education.nic.in**

மத்திய மனிதவளமேம்பாட்டு அமைச்சகத்தால் நிர்வகிக்கப்படும் இணையதளம் இது. இத்தளத்தில் பள்ளிக்கல்வி மற்றும் உயர்கல்வித் துறை தொடர்பான ஏராளமான செய்திகள் உள்ளன. இந்திய அரசாங்கத்தால் மாணவர்களுக்கு அறிவிக்கப்படும் உதவித்தொகை அறிவிப்புகள் மட்டுமின்றி பிற நாடுகளால் இந்திய மாணவர்களுக்கு அறிவிக்கப்படும்

சலுகைகள், கல்வி உதவித் தொகைகள் பற்றிய விவரங்களும் இத்தளத்தில் தெரிந்து கொள்ளலாம்.

## www.scholarship-positions.co

இளநிலை, முதுநிலை, முனைவர் பட்டப் படிப்பு மற்றும் அதற்குப் பிந்தைய கல்விகளுக்கான உதவித்தொகை நிலவரங்களை தெரிந்துகொள்ள இந்த வலைத்தளம் உதவுகிறது. பல்கலைக்கழக வாரியாக உதவித்தொகை விவரங்கள் மட்டுமின்றி செய்தி மடல்களைப் பெறும் வசதியும் இதில் உண்டு. மேலும் இதில் மாணவர்களுடைய சந்தேகங்களுக்கும் பதில் தரப்படுகிறது. இதைத் தவிர, வெளிநாட்டு படிப்புகள் சம்பந்தமான உதவிக் குறிப்புகள், அதற்கான உதவித்தொகைகள் பற்றிய தகவல்களும் தெரிந்து கொள்ள உதவுகிறது இந்த இணையதளம்.

## www.studyabroadfunding.com

வெளிநாட்டுப் படிப்பிற்கான உதவித்தொகை கோருபவர்களுக்காக இந்தத் தளம். குறிப்பாக, அமெரிக்காவில் படிப்பதற்கான எல்லா விவரங்களும் இந்தத் தளத்தில் உண்டு. அமெரிக்க பல்கலைக் கழகங்கள், தனியார் நிறுவனங்கள் தரும் உதவித்தொகைகள் பற்றியும் அறிந்து கொள்ளலாம்.

## www.eastchance.com

இந்த வலைத்தளம் இளநிலை மற்றும் முதுநிலைப் படிப்புகளுக்கு வழங்கப்படும் உதவித்தொகை விவரங்களைக் கொண்டிருப்பதோடு, கல்விக்கடன்கள், கோடைகால வகுப்புகள் பற்றிய விவரங்களையும் கொண்டுள்ளது. நாடு வாரியாக விவரங்கள் தெளிவாக தொகுக்கப்பட்டுள்ளன. கையாள்வதும் எளிதாக இருக்கிறது என்பது இதன் சிறப்பு அம்சம்.

**மேலும் சில பயனுள்ள வலைத் தளங்கள்:**

www.bankbazzer.com/education

www.tmt.in-retail-educationalloan

www.scholarshipsportal.com

www.studyguideindia.com

www.career360.com

# பட்டயகணக்கர் (CA) தேர்வில் தேர்ச்சி பெற்ற நம்மவர்

## சி. சூரியா B.Com.,(PA), ACA, CS (Professional), கோவை.



சொக்கம்பட்டி திரு P. **சின்னத்துரை–ஜீவராணி** தம்பதியரின் மகன் **செல்வன் சி. சூரியா** B.Com.(PA), ACA, CS (Professional) தனது 22-வயதில் பட்டயகணக்கர் (Chartered Accountancy) தேர்வில் தேர்ச்சி பெற்றுள்ளார். தான் எவ்வாறு படித்து பட்டம் பெற்றதைக் குறித்து C.A. படிக்க விரும்பும் மாணவ மாணவியர்களுக்கு வழிகாட்டும் வகையில் நம்மிடையே விவரிக்கிறார்.

அருவியூர் நகரத்தார் பெருமக்கள் அனைவருக்கும் என் பணிவான வணக்கங்கள்!

நான் நவம்பர் மாதம் 2020-இல் நடைபெற்ற C.A.தேர்வில் தேர்வு பெற்றுள்ளேன் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கின்றேன். நான் நம்பிக்கையுடன் முயற்சி செய்து தேர்வில் வெற்றிபெற காரணமானவைகளை C.A. மற்றும் +2 வகுப்பில் படிக்கும் மாணவர்களுக்கு உதவியாக இருக்கும் என்ற நோக்கில் உங்களிடம் பகிர்ந்து கொள்கின்றேன்.

ஒரு மலர் மலர்வதற்கோ அல்லது ஒரு காய் கனியாவதற்கோ அதற்கான தகுந்த நேரம் வரும் வரை காத்திருக்க வேண்டும் என்பார்கள். அதற்காக அது உள்ளூர உழைத்துக் கொண்டேயிருக்கும். அதுபோன்றது தான் நம் இலட்சியங்களும். கொரோனா காலம் அனைவருக்கும் சோதனையை பரிசளித்தது. முதல் அலையைப் போல் இரண்டாம் அலையிலும் மீண்டு வருவோம்.

அன்று வாட்ச்அப் குரூப்பில் நடைபெற்ற “கனவுகள் மெய்ப்பட வேண்டும்” என்ற தலைப்பில் நடந்த கட்டுரைப் போட்டியில் என் கனவின் அடித்தளமாக கருதிய C.A. தேர்வில் வெற்றி பெற வேண்டும் என்ற எனது கனவு இன்று நனவாகியுள்ளது என்பதை மேற்கூறிய இயற்கை நியதியோடு பொருத்திப் பார்க்க முடிகிறது.

“எப்போதும் படித்துக்கொண்டே இருக்க வேண்டும்; நமக்காக நேரத்தை ஒதுக்க முடியாது; தேர்வு மிகக் கடினமானதாக

இருக்கும்; ஒரு பாடத்தில் தோல்வி அடைந்தால் மீண்டும் தேர்வு எழுத வேண்டும்." இவைகளே இத்தேர்வில் நுழையும் மாணவர்களின் மனோதிடத்தை சோதிக்கும் காரணிகளாக இருக்கின்றன.

பத்தாம் வகுப்பு தேர்வு முடிந்தவுடன் C.A. தேர்விற்கு பதிவு செய்யும் வாய்ப்பு தமிழக அரசுடன் SIRC of ICAI கொண்டு புரிந்துணர்வு திட்டத்தின்மூலம் அரசுப் பள்ளிகளில் படிக்கும் மாணவர்களுக்கு C.A. தேர்விற்கான பயிற்சிகள் அளிக்கப்படுகின்றன. பிறகு C.A. Scholarship, ICAI வின் பயற்சி வகுப்புகள் என கிடைக்கும் வாய்ப்புகளோடு நம் முயற்சியும் சேர்ந்தால் நிச்சயம் வெற்றி பெறலாம்.

**"மனம் எதை சிந்தித்து நம்புகின்றதோ அதை மனிதன் அடைகிறான்."** எனவே இத்தேர்வில் நம்பிக்கையுடன், ஆர்வமும் இருக்கும் பட்சத்தில் +2 வகுப்பு காமர்ஸ் குரூப் முடித்தவுடன் C.A. Foundation தேர்வு மூலமாகவோ அல்லது B.Com., முடித்த பின்னர் C.A. Inter தேர்வினை எழுதுவதன் மூலமாகவோ ஆடிட்டர் படிப்பிற்குள் அடியெடுத்து வைக்கின்றோம்.

பயிலும் போதே நடைமுறைப்பயிற்சி அளிக்கும் ஒரு சில தேர்வுகளில் C.A. தேர்வும் ஒன்று. மேலும் சமீபத்தில் UGC பட்டயக்கணக்காளர் (C.A.) நிறுவனச் செயலாளர் (CS) மற்றும் ICWA தேர்வுகள் முதுகலை பட்டத்திற்கு சமமாக கருதப்படும் என்று தீர்மானித்துள்ளது. இத்தேர்விற்கான நுழைவுக் கட்டணம் இளநிலைப் படிப்பிற்கு செலுத்தும் கட்டணத்தை விடவும் குறைவாகவே உள்ளது. எனவே உங்கள் திறமையிலும், முயற்சியிலும் எந்த அளவிற்கு நீங்கள் நம்பிக்கை வைக்கிறீர்களோ அந்த அளவிற்கு அவற்றை நீங்கள் உங்களிடம் வளர்த்துக் கொள்கிறீர்கள். இதே நம்பிக்கைதான்

இன்று நான் எனது 22-வது வயதில் C.A. முடிப்பதற்கும் கோயமுத்தூரில் சுயமாக C.A. Firm நிறுவுவதற்கும் ஊக்கம் அளித்தது என்பதில் எவ்வித ஐயமும் இல்லை.

எனவே C.A. படிக்க விரும்பும் மாணவ மாணவிகளே! துணிச்சலோடு நம்பிக்கையோடும் விடாமுயற்சியோடும் செயல்படுங்கள்! சாதனைகள் பல புரியுங்கள்!!

மேலும் விபரங்களுக்கு என்னை தொடர்பு கொள்ள வேண்டுகிறேன். செல் : 99763 72162

# நம்மவரில் மேலும் ஒரு ஆடிட்டர்

**- திரு பழ. ராம்குமார்,** C.A., திருச்சி
**ram.9942369107@gamil.com**



பூர்வீகம் வா. புதூர் தற்போது திருச்சியில் வசித்து வரும் தெய்வத்திரு சோ. பழனிசாமி செட்டியார்- நலமுடன் திருமதி பழ. மணிமொழி ஆச்சி இவர்களது மகன் திரு பழ. ராம்குமார் அவர்கள் கடந்த 2020 டிசம்பரில் நடைபெற்ற C.A. தேர்வில் வெற்றி பெற்று ஆடிட்டராகி உள்ளார்.

**C.A. படிப்பதற்கு எடுத்துக் கொண்ட முயற்சிகள் :**

நான் எனது குடும்பத்துடன் சிறுவயதில் கடலூர் மாவட்டம் குறிஞ்சிப்பாடியில் வளர்ந்தேன். அங்கிருந்து வியாபார நிமித்தமாக திருச்சிக்கு 1995-ஆம் ஆண்டு புலம் பெயர்ந்தோம். நான் எனது பத்தாம் வகுப்பு பொதுத் தேர்வை 1998-ஆம் ஆண்டு சிறப்பாக முடித்தேன்.

நமது சமூகத்தில் சில குடும்பங்களில் இருக்கும் வழக்கம் போல எனது குடும்பத்திலும் பத்தாம் வகுப்பு பள்ளி படிப்பிற்கு பின் கல்வியைத் தொடர விரும்பாமல் வியாபாரத்தில் முனைப்புடன் ஈடுபடுத்தப்பட்டேன். அப்போது எவ்வித முன் அனுபவமும் இன்றி சிறு மளிகை தொழில் எங்கள் குடும்பத் தொழிலாக மாறியது. இதன் காரணமாக பள்ளிப் படிப்பை ஒரு வருடத்திற்கு நிறுத்த வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. பின்னர் சிறிது முயற்சிக்குப் பின் +2 வகுப்பு தனித்தேர்வர்கள் (Private Candidate) தேர்வு எழுதி 2000-ஆம் ஆண்டு பன்னிரண்டாம் வகுப்பு தேர்ச்சி பெற்றேன்.

அதன்பின் கல்லூரிப் படிப்பை தொடர மனமில்லாமல் இருந்தபோது எங்கள் வீட்டருகே இருக்கும் பேராசிரியரின் பெரும்முயற்சிக்குப் பின் எங்கள் குடும்ப சம்மதம் பெற்று எங்கள் பகுதியில் இருக்கும் சிறந்த கல்லூரியில் நான் இளங்கலை படிப்பை 2003-ஆம் ஆண்டு நிறைவு செய்தேன். படிப்பை தொடங்குவதில் சில தடங்கல்கள் இருந்தாலும் எனது

இலக்கு C.A. (பட்டய கணக்காளர்) ஆகத்தான் இருந்தது. ஆதலால் நான் தொலைதூர படிப்பான C.A. வை 2003-ஆம் ஆண்டு துவங்கினேன். C.A. இன்டர் படிப்பை 2006-ஆம் ஆண்டு நிறைவு செய்தேன். அதனைத் தொடர்ந்து டிரெய்னி (Trainee) ஆக 2009 வரை எனது பகுதியில் இருக்கும் ஒரு ஆடிட்டரிடம் பணிபுரிந்தேன். C.A. இறுதி ஆண்டு படிப்பை 2009-ஆண்டு துவங்கினேன். 2012-ஆம் ஆண்டு இறுதித் தேர்வில் பகுதி ஒன்று தேர்வில் வெற்றி அடைந்தேன்.

2013-ஆம் ஆண்டு எனக்கு திருமணம் நடந்தது. 2016-ஆம் ஆண்டு எங்களுக்கு ஒரு பெண் தேவதை பிறந்தாள்.

2018-ஆண்டு நான் பகுதிநேர டிரெய்னி (paid assistant) ஆக ஒரு ஆடிட்டர் அலுவலகத்தில் பணியில் சேர்ந்தேன். அதன்பின் 2020-ஆம் ஆண்டு டிசம்பர் மாத தேர்வில் பட்டய கணக்கர் இறுதி (C.A. Final) பகுதி இரண்டு தேர்வில் வெற்றி அடைந்தேன்.

இப்போது நான் தனியாக எங்கள் பகுதியில் சி.ஏ. ஆடிட்டர் அலுவலகம் தொடங்கி உள்ளேன்.

இந்திய முன்னாள் குடியரசு தலைவர் டாக்டர் அப்துல் கலாமின் வார்த்தைகளில் கூற வேண்டும் என்றால் நாம் அனைவரும் விழித்திருக்கும்போது கனவு காண வேண்டும். அந்தக் கனவு நமது எதிர்கால வாழ்க்கையை தீர்மானிக்கும்.

## வாழ்த்துக்கள்

...மெய்வருத்தக் கூலி தரும் என்கிற வள்ளுவரின் வாக்கிற்கேற்ப விடாமுயற்சியுடனும், லட்சியத்துடனும் போராடி வெற்றிக் கனியை ஈட்டிய திரு. பழ. ராம்குமார் C.A. அவர்களுக்கு வாழ்த்துக்களையும், பாராட்டுக்களையும் தெரிவித்துக் கொள்கிறேன். - **தலைவர், கல்வி வளர்ச்சிக் கழகம்.**

### பூவையருக்கான அரிய தகவல்

வீட்டில் எறும்பு புற்று இருந்தால் அங்கே கொஞ்சம் பெருங்காயத் தூளைத் தூவி விட்டால் எறும்புத் தொல்லை இருக்காது.

# நம்மவரில் முதல் பெண் வழக்கறிஞர்



பூர்வீகம்-படமிஞ்சி, விழுப்புரம், பூதமங்கலூருடையார் **தெய்வத்திரு. சு. சிவலிங்கம் செட்டியார்** நலமுடன் சி. அன்புமலர் ஆச்சி இவர்களின் மகள் **திருமதி. சி. ஆர்த்திகா இளையராஜா** விழுப்புரம் அரசு சட்டக்கல்லூரியில் பயின்று செப்டம்பர் 2020-இல் L.L.B. பட்டம் பெற்று **தமிழ்நாடு பார் கவுன்சிலில் வழக்கறிஞராகப் பதிவு செய்துள்ளார்.** மேலும் தற்போது அதே சட்டக்கல்லூரியில் முதுநிலை வழக்கறிஞர் பட்டப்படிப்பில் (L.L.M.) சேர்ந்து முதலாம் ஆண்டு படித்து வருகிறார்.
**தகவல் : திரு க. இளையராஜா, சொக்கம்பட்டி.**

நமது சமூகத்தில் முதல் பெண் வழக்கறிஞரான திருமதி. சி.ஆர்த்திகா இளையராஜா **B.Sc., L.L.B.** அவர்களைப் பாராட்டுவதில் கல்விவளர்ச்சிக் கழகம் பெருமிதம் கொள்கிறது. **– தலைவர். அ.வ.ந. கல்விவளர்ச்சிக் கழகம்.**

## ஹிந்தி மொழித் தேர்வில் B.A., பட்டம் :



1. பொய்யாமணிப்பட்டி கமுகக்கூருடையார் பொன்னமராவதி ராம. சுந்தரமூர்த்தி செட்டியார்- தேன்மொழி ஆச்சி மற்றும் சொ. முத்தாவுடையான் செட்டியார் -இராஜேஸ்வரி ஆச்சி ஆகியோரின் பேத்தியும், சு. செந்தில் குமார் - பொன்மலர் ஆகியோரின் மகளுமாகிய செல்வி **செ.கு. வேதஸ்ரீ** 2016-2019 ஆகஸ்ட்-இல் நடைபெற்ற ஹிந்தி மொழித் தேர்வில் B.A. பட்டம் பெற்றுள்ளார். மேலும் இவர் 2019-இல் அபாகஸ் பயிற்சியில் பட்டம் பெற்றுள்ளார்.

2. உலகம்பட்டி, நாவலூருடையார் சத்தியமங்கலம், சொ. சுப்பையா செட்டியார்-ஜெயலட்சுமி ஆச்சி மற்றும் திருச்சி இராம. மணிவாசகம் செட்டியார்-சௌந்தரம் ஆச்சி ஆகியோரின் பேத்தியும் கோவை சுப. சொக்கலிங்கம்- காமாட்சி ஆகியோரின் மகளுமாகிய **செல்வி சொ. ஐஸ்வர்யா** அவர்கள் ஆகஸ்ட் 2020-இல் நடைபெற்ற ஹிந்தி மொழித் தேர்வில் ப்ரவீன் உத்தராத் பட்டம் பெற்றுள்ளார். மேலும் இவர் பிப்ரவரி 2020-இல் ஆங்கில தட்டச்சில் ஜுனியர் பிரிவில் தேர்ச்சி பெற்றுள்ளார். **தகவல்: திரு இராமநாதமோகன், திருச்சி.**



பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்தும்
இருள்தீர எண்ணிச் செயல்

- திருவள்ளுவம்

## நல்வாழ்த்துகளுடன்...

### DEEPA ERECTORS PRIVATE LIMITED

No. 16/5, 1st Main Road, Ramakrishna Nagar,
Ernavoor, Chennai - 600057
mail to : depl@depltd.in

### PHOENIX OILFIELD SERVICES & CONTRACTING LLC

P.O. BOX: 1151, WADI KABIR P.C. 117,
Sultanate of Oman.

*Specialists in :*

**Construction of Storage Tanks, Pressure Vessels, Pipelines and Blasting & Painting in India & Overseas**







R. Paramasivam B.E.,
***Managing Director***
Ph.: 9884660379

Pa. Mathivanan B.E.,
***Chief Executive Officer***
& A. Nivetha B.E., M.B.A.,
***Business Analyst***

Pa. Shankar B.E., M.S.,
(Sweden)
***Consultant***

# கண்ணீர் அஞ்சலி



தோற்றம்
29.04.1947

மறைவு
28.04.2021

## தெய்வத்திரு. எம். கணேசன் செட்டியார்

குறள்

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான்உறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.

பூர்வீகம் கிருங்காக்கோட்டை வேலன் செட்டியார் வகையறா சேர்ந்த தெய்வத்திரு. கு. முத்துப்பழனி செட்டியார், மு. செண்பகம் ஆச்சி மகனுமான கம்பிளியம்பட்டி Ex. தலைவர் எம். கணேசன் செட்டியார் அவர்கள் இறைவனடி சேர்ந்தார் என்பதை ஆழ்ந்த இரங்கலுடன் தெரியப்படுத்துகிறோம்.

---

**சகோதரிகள்:**

தெய்வத்திரு. முத்துப்பழனி செட்டியார் – நலமுடன் மு. தனுஸ்கோடி ஆச்சி
A.K. நடராஜன் செட்டியார் – தெய்வத்திருமதி ந. மீனாம்பாள் ஆச்சி
தெய்வத்திரு. K.A. சிவலிங்கம் செட்டியார் – நலமுடன் சி. கல்யாணி ஆச்சி

---

**மகன், மருமகள்:**

G. சிவசுப்பிரமணி – S. கீதா, மதுரை

---

**மருமகன்கள், மகள்கள்:**

K.A.S. சந்திரசேகர் – C. நாகேஸ்வரி, மதுரை
K.N. பூபதி – B. சங்கர ஜெயந்தி, மதுரை
G. அலங்காரம் – A. செல்வமீனா, பொன்னமராவதி

பேரன், பேத்திகள் மற்றும்
உறவினர்கள், நண்பர்கள்

# கண்ணீர் அஞ்சலி



**தெய்வத்திரு. S.M. தங்கராஜ் செட்டியார்**

(பூர்வீகம்: பொய்யாமணிபட்டி இருப்பு : சேலம்)

தொற்றம் : 28-1-1952 மறைவு: 24.5.2021

**தெய்வத்திருமதி. த. புஸ்பவள்ளி ஆச்சி**

தொற்றம் : 20-5-1957 மறைவு: 10.1.2020

இணைபிரியா தம்பதிகளாக பூவுலகில் வாழ்ந்தவர்கள்
இனியும் இணை பிரியாதிருக்க வானுலகம் சென்றீர்களோ!

என்றென்றும் உங்கள் நினைவுகளோடும்
வழிகாட்டுதலோடும்....

மகன்: **த. சுரேஷ்** மருமகள்: **த. தென்றல்**
பேரன்கள்: **சு. அஷ்வின் & சு.தெ. கனியன்**

---

மகள்: **த. சுமதி** மருமகன்: **A.S. மயிலப்பா**
பேரன்: **S.M. சூர்யா**

# 39-வது கல்விக் காவலர்
## தவப் புதல்விகளின் குடும்பத்தினர்



திருமதி M. மாலதி D.Pharm., - திரு. PL. முருகேசன்
செல்வி: M. நிவேதா B.E., MSW, B.Lit., (Hindi)
செல்வி: M. காயத்ரி B.Sc., B.Lit., (Hindi)



திருமதி S. ஜெயந்தி - திரு. A. சண்முகநாதன்
செல்வன்: S. நாகராஜன் B.Sc., M.Tech., WIPRO, COVAI
செல்வன்: S. நாகவிஜய் B.Com.,

அட்டைப்பட விளக்கம்

# 39-வது கல்விக்காவலர்



இந்த இதழின் கல்விக்காவலர்களாக அட்டைப்படத்தை அலங்கரிப்பவர்கள் பூர்வீகம்-செம்பூதி/ பொன்னமராவதி தெய்வத்திருவாளர்கள் தே.மா. சுப்பையா செட்டியார்-சுப. பூங்கோதை ஆச்சி அவர்கள்,

மேலூருடையார், தெய்வத்திரு தே.மா. சுப்பையா செட்டியார் அவர்கள், செம்பூதி தெய்வத்திரு தே. மாணிக்கம் செட்டியார்-தேனம்மாள் ஆச்சி இவர்களின் ஆறாவது மகனாக 24-04-1941 அன்று பிறந்தார். இவர் சிறுவயதாய் இருக்கும் போதே இவரது தந்தையார் இயற்கை எய்திவிட்ட காரணத்தால் தாயாரின் அன்பான பராமரிப்பில்-அரவணைப்பில் தன் சகோதர சகோதரிகளுடன் செம்பூதியில் வளர்ந்தார். பின்னர் 1949-இல் குடும்பத்துடன் பொன்னமராவதிக்கு குடி பெயர்ந்தனர். அதன்பின் நம் கல்விக்காவலர் அவர்கள் தன் அண்ணன்களுடன் சேர்ந்து ஷண்முகவள்ளி ஜவுளி ஸ்டோர் என்கிற நிறுவனத்தை நடத்திவரலாயினர். இவர் ஒரு கடின உழைப்பாளி. இவர் வணிகத்தின் பொருட்டு திருச்சி, கள்ளக்குறிச்சி போன்ற வெளியூர்களுக்குச் சென்று தங்கி பணிபுரிந்தும் வந்துள்ளார்கள்.

**பாசமிகு சகோதர சகோதரிகள் :**

1. தெய்வத்திருவாளர்கள் அ. சிவபாக்கியம் ஆச்சி - அண்ணாமலை செட்டியார், கட்டுக்குடிபட்டி.
2. தெய்வத்திருவாளர்கள் ஏ. மீனாம்பாள் ஆச்சி-ஏகாம்பரம் செட்டியார், பொன்னமராவதி
3. தெய்வத்திருவாளர்கள் தே.மா. சண்முகம் செட்டியார் ஞானாம்பாள் ஆச்சி, நத்தம்.
4. தெய்வத்திரு தே.மா. நாராயணன் செட்டியார்-நலமுடன் நா. சண்முகவள்ளி ஆச்சி, பொன்னமராவதி.
5. திரு. தே.மா. பழனிச்சாமி செட்டியார்-சரஸ்வதி ஆச்சி, பொன்னமராவதி.

**திருமண வாழ்க்கை :**

பொன்னமராவதி திரு. A.V. சேதுராமன் செட்டியார்-சிவஜோதி ஆச்சி இவர்களின் மூத்த மகள் பூங்கோதையை 29-01-1969 அன்று மணம் முடித்தார்கள்.

**மதிப்பு மிக்க சகலைகள் :**

1. திரு. S. இராமலிங்கம் செட்டியார்-திருமதி இராஜமாணிக்கம் ஆச்சி, சென்னை.
2. திரு.G. சுப்ரமணியம் செட்டியார்-திருமதி சாந்தி ஆச்சி, கோவை.

**மதிப்புமிக்க மைத்துனர் :**

1. திரு. S. இராமமூர்த்தி செட்டியார் - திருமதி. சிவகாமி ஆச்சி, பொன்னமராவதி.

**கல்விக்காவலர்களின் புதல்விகள் :**

1. திருமதி. M. மாலதி D.Pharm. - திரு முருகேசன்
   ஸ்ரீ முருகன் மெடிக்கல்ஸ், கோவை.
2. திருமதி. S. ஜெயந்தி - திரு A. சண்முகநாதன், நாகம்மாள் நோட்புக்ஸ், கோவை.

**ஆசை பேரன் பேத்திகள் :**

1. M. நிவேதா B.E. B.Lit.(Hindi) M.S.W. துணை மேலாளர், தமிழ்நாடு கிராம வங்கி. முத்தூர் கிளை (காங்கேயம் அருகில்)
2. M. காயத்ரி B.Lit.(Hindi), B.Sc.,
3. S. நாகராஜன் B.Sc., M.Tech, Wipro, கோவை.
4. S. நாகவிஜய்.

**மதிப்பிற்குரிய சம்பந்திகள் :**

1. தெய்வத்திருவாளர்கள் C.பழனிச்சாமி செட்டியார்-மீனாம்பாள் ஆச்சி, அம்மன்குறிச்சி.
2. தெய்வத்திருவாளர்கள் R.M. ஆதப்பன் செட்டியார்-
   A. ஜெயமணி ஆச்சி, சொக்கம்பட்டி.

**சஷ்டியப்த பூர்த்தி :**

இவர்களது சஷ்டியப்த பூர்த்தி மணிவிழா ஏப்ரல் மாதம் 2001-ஆம் ஆண்டு தன் குடும்பத்தாருடன் பேரூர் பட்டீஸ்வரர் கோயிலில் வெகு சிறப்பாக நடைபெற்றது.

**கல்விக்காவலரின் சிறப்பு :**

நமது கல்விக்காவலர் தெய்வத்திரு தே.மா. சுப்பையா செட்டியார் அவர்கள் தெய்வபக்தி மிக்கவர். சபரிமலை, வெள்ளியங்கிரி, இராமேஸ்வரம் போன்ற திருத்தலங்களுக்கு அடிக்கடி சென்று வந்துள்ளார். தன் பிள்ளைகள் மீது மட்டுமல்லாமல் அனைவர் மீதும் மாறாத பிரியம் கொண்டிருந்தார். அனைவரிடமும் எளிதில் பழகக் கூடியவர். நமது கல்விக்காவலர் தெய்வத்திரு பூங்கோதை ஆச்சி அவர்கள் மிகுந்த பொறுமையும், தெய்வபக்தியும் உடையவராய் விளங்கினார். தன் குடும்பத்தினரை அரவணைத்துச் சென்றதோடு, அவர்களிடம் மிகுந்த பாசத்துடன் இருந்து பிறருக்கு எடுத்துக்காட்டாய் வாழ்ந்தவர். இவர் 11-07-2001 அன்று தனது 48-வயதில் சிவபதம் அடைந்தார். நமது கல்விக்காவலர் அவர்கள் தனது துணைவியார் மறைவிற்குப் பிறகு தன்னுடைய மகள்களுக்கு நல்ல வழிகாட்டியாய் திகழ்ந்து, அவர்களுக்கு உறுதுணையாக இருந்து வந்தார். இவர் 19-02-2021 அன்று தமது 80-வது வயதில் இறைவனடி சேர்ந்தார்கள். கல்விக்காவலர்கள் குடும்பத்தில் ஏற்கனவே கல்விகாவலர்களாக இருப்பவர்கள்:

1. மேலூருடையார் திரு தே.மா. பழனிச்சாமி செட்டியார்-சரஸ்வதி ஆச்சி, பொன்னமராவதி.
2. மேலூருடையார் தெய்வத்திரு தே.மா. நாராயணன் செட்டியார்-சண்முகவள்ளி ஆச்சி, பொன்னமராவதி.
3. பூதமங்கலமூருடையார் திரு. ச. இராமலிங்கம் இராஜாமாணிக்கம், அயனாவரம், சென்னை.

ஒரே குடும்பத்தில் பல உறுப்பினர்கள் கல்விக்காவலர்களாகி கல்விப் பணியில் தொண்டாற்றிவரும் இவர்கள் தங்கள் வாழ்விலும், இவர்களின் சந்ததியினரும் எல்லா வளமும் நலமும் பெற்று உயர்வடைய எல்லாம் வல்ல மங்கைபாகர்-தேனம்மை திருவருளை வேண்டுகிறோம்.

**- தலைவர். அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகம்.**

சென்னை மாநகர் அருவியூர் வடக்குவளவு நகரத்தார் சங்கம்
மேன்மேலும் வளர எங்கள் இதயங்கனிந்த நல்வாழ்த்துக்கள்.



**S. Chandrasekar** B.Sc., B.Ed., M.B.A

**Mobile: 98404 39115**

## ANANTHAM CONSULTANCY
## LIC AND TAX ADVISOR

### Income Tax, GST,
### Pan Card

**7/552, 7th Block, Mogappair West, Chennai - 37.**

Email: chandrupmv@gmail.com

ஆன்மீகப் பகுதி

## திருத்தொண்டர் பெருமை

# நாயன்மார் நெஞ்சம்



திருமுறைத் திருப்பணித் தொண்டர், சைவப் புலவர் -
சிவகுரு வா.நா. சுந்தரம் எம்.ஏ., திருவையாறு

சேது நாடு என்று சொல்லப்பட்ட (தென் ஆற்காடு) பகுதியில் உள்ள திருக்கோவலூர் என்ற ஊரில், மலாடர் என்ற மரபினர் வசித்து வந்தனர். மலையமான் வழிவழி வாழும் இந்த மரபினர், சிவபெருமானிடம் மிகவும் அன்பு கொண்டு வழிவழியாய், அவர்க்கும், அவர் அடியார்க்கும் தொண்டு செய்யும் தூய்மையான நன்னெறியைப் பின்பற்றி வாழ்ந்து வரலாயினர். இந்த மரபைச் சார்ந்த ஒரு அரசர்; எம் பெருமானிடம் மிக்க அன்புகொண்டு, அவர் அடியார் பெருமக்களின் மனம் போலப் பணி செய்வதில் மிக்க விருப்பமும், ஆர்வமும் உடையவராய் அரசாட்சி செய்து வந்தார். அறநெறி பிறழாமல் நல்லாட்சி செய்து வந்ததோடு, குடிமக்களை நன்கு பாதுகாத்து, தேவையறிந்து பற்பல உதவிகளையும் வழங்கி நல்லாட்சி நடத்தி வந்தார்.

தனது தோள் வலிமையால், தன்னை வெறுத்து எதிர்த்த பகைமனம் கொண்ட பல மன்னர்களை வென்று பெரு வீரம் மிக்கவராயும் விளங்கி வந்தார். சிவபெருமானிடம் பேரன்பு காட்டும், சிவனடியார்களின் திருவேடத்தையே "மெய்ப்பொருள்" எனக் கருதி வாழ்ந்து வந்ததால், அவரை மக்கள் **மெய்ப்பொருள் நாயனார்** என்று சிறப்புப் பெயரிட்டு அழைத்து வந்தனர். தாம் தேடிய செல்வங்கள் எல்லாம் இறைவன் தந்தது என்ற சிந்தை கொண்ட அவர்; திருக்கோவில் அனைத்திலும் வழிபாடு, பாடல், ஆடல், திருவிழா, பூசை ஆகியவை சிறப்பாக தடையின்றி நடந்து கொண்டிருக்க தக்க ஏற்பாடுகள் செய்தார்; அதோடு அல்லாமல் சிவனடியார்கள் தம்மை எப்போது வேண்டுமானாலும் சந்திக்கவும், உதவிகள் பெறவும்

தடையேதும் இல்லாதவாறும், உத்தரவிட்டு அடியார் பெருமக்களுக்கு குறைகளே இல்லாதவாறு அறம் போற்றி, தரும அரசாட்சி புரிந்திருந்தார்.

சிவனடியார்களே, சிவபெருமானின் மெய்ப்பொருள் என எண்ணி, நம்பி, வாழ்ந்து வரும் நாளில், இவர்மீது பொறாமை கொண்டு, **முத்தநாதன்** எனும் அரசன் பகைமை கொண்டான். அதன் காரணமாக இவர் மீது பலமுறை போரிட்டு தோற்று; தனது குதிரைப்படை, யானைப்படை, காலாட்படை ஆகியவைகளை இழந்தும், பகைமையை மட்டும் இழக்காமல் மேலும் மேலும் பொறாமையால் மனம் புழுங்கினான். இனிமேல் இவரை எதிர்த்து படை கொண்டு வெல்வது சாத்தியமில்லை. சூழ்ச்சியால் வெல்வதுதான் சரியான வழி என்ற முடிவுக்கு வந்தான். சிவனடியார் வேடத்தையே மெய்ப்பொருள் நம்பும் அரசரை, அவ்வேடத்தைக் கொண்டே வெல்ல முடிவு எடுத்தான்.

இவருடைய வரலாற்றை 24 வெண்பாக்களாக (96 வரிகள்) படைத்தளித்த சேக்கிழார்,7-வது பாடலில் முத்தநாதன் கொண்ட வேடத்தை நயம்பட பாடியருளியிருக்கிறார். **"மெய்யெலாம் நீறு பூசி"** என்று தொடங்குகிறது அந்தப் பாடல். உடம்பு எல்லாம்-(கண்டபடி) திருநீறு பூசிக் கொண்டு, தலைமயிரைச் சுருட்டி கட்டிக்கொண்டு ஒரு கூர்மையான கத்தியை, அக்கால வழக்கப்படியான ஏட்டுச் சுவடிக் கட்டுப் போல் ஒரு துணியில் சுருட்டிக் கட்டிக்கொண்டு, நன்கு ஒளிவீசும் விளக்கின் உள்ளே 'கருப்பு' இருப்பது போல், தனது வேடத்திற்குள் தனது கெட்ட எண்ணத்தை மறைத்துக் கொண்டு; தவ வேடத்தை பொய்யாகப் புனைந்து கொண்டு 'மெய்ப்பொருள் நாயனார்' இருக்கும் அரண்மனையை அடைந்தான்.

"மெய்யெல்லாம் நீறு பூசி" என்று ஆரம்பமாகும் இப்பாடல் அற்புதமான பொருள் வளம் செரிந்தது. சைவ ஆகம விதிப்படி உடம்பில் 16 இடங்களில் திருநீறு பூசிக்கொள்வது மரபு. வஞ்சகனான முத்தநாதன் எங்கு எங்கு திருநீறு பூச வேண்டும் என்ற விதிமுறை அறியான்; ஆகவே மெய்யெல்லாம்-

உடம்பெலாம் திருநீறு பூசிக் கொண்டான். “அரசர்களின் முகவசீகரத்தைக் கூட்டும்” ‘அழகிய சிகை’ யைச் சுருட்டி, சடாமுடியினைப் போல் உயர்த்தி கட்டி கொண்டானாம். இருட்டைத் தன்னிடத்திலே வைத்திருக்கும் விளக்குப் போல, தன் வேஷத்தை நல்ல உள்ளம் படைத்த சிவனடியார் போல் மாற்றிக் கொண்டு, மாறாது இருக்கும் ‘இருள்’ போல தன் மனதில் ‘வஞ்சகம்’ மாறாது இருக்க; நல்ல அறச் செய்திகளைக் கூறும் நூல்போல் தோற்றமளிக்கும், ஏட்டுச் சுவடிகளை கட்டி பராமரிக்கும் “புத்தகக் கவளி” போன்று தோற்றம் தரக்கூடிய ஒரு துணிச் சுருட்டுக்குள், கரிய கத்தியை மறைத்து எடுத்துக் கொண்டான் என்று இப்பாடல் பொருள் நயம் காட்டவல்லதாய் பாடப்பெற்றுள்ளது.

அரசரின் நிரந்தர உத்திரவுக்கு இணங்க, அரண்மனைக் காவலர்கள், முத்தநாதனாகிய சிவவேடத்தாரைக் கண்டவுடன் ‘உள்ளே எழுந்தருளும்’ என அரண்மனைக்குள் அனுமதித்தனர். இச்சலுகையினால் அரண்மனை சட்டதிட்டங்கள் பலவற்றையும் தாண்டி முத்தநாதன்; மெய்ப்பொருள் நாயனார் துயிலுறங்கும் பள்ளியறை வாயில் முன் வந்து சேர்ந்தான். வாயிலில் அரசரிடம் மிகப் பக்தி கொண்ட, கடமை தவறாத, நல்ல வேலைக்காரன் ஒருவன் மெய்க்காப்பாளனாக, ‘தத்தன்’ என்ற நெஞ்சுரம் மிக்கவன் காவல் புரிந்துகொண்டிருந்தான். ‘இந்த நேரம் மன்னர்பிரான் உறங்கும், நேரம் சமயம் அறிந்து செல்வதே நல்லது’ எனக் கூறித் தடுத்தான்.

முத்தநாதனோ அரசருக்கு வீடுபேறு அளிக்கக்கூடிய ஒரு உண்மையான பொருளைக் கூறுவதற்காக வந்திருக்கிறேன் ‘விலகி நில்’ என்று ‘தத்தனை’ விலக்கி விட்டு பள்ளியறையில் புகுந்தான். தன்னால் மெய்பொருள் கொல்லப்பட்டாலும், அவருக்கு வீடு பேறு கிடைக்கும் என்று முத்தநாதன் சொல்லாக – கவிஞர் – இங்கு கவித்திறத்தைக் காட்டி உள்ளதை கவனித்து மகிழ்வோமாக.

கட்டிலில் மெய்ப்பொருள் உறங்குகிறார். அவருக்கு பணிவிடை செய்து கொண்டிருந்து விட்டு, அரசமாதேவி அப்போதுதான் படுக்கிறார். இன்னும் உறங்கவில்லை. திடுமெனப் பள்ளியறையினுள் புகும் அடியாரைக் கண்டவுடன் தேவி எழுந்து கொள்கிறார்; சிவனடியார் என்று உணர்ந்தவுடன், அரசரின் மனப்போக்கை நன்கு உணர்ந்த மனைவி ஆகையால், கணவரை உடனே துயில் எழுப்புகிறார். கணவனும் மனைவியும் படுத்துறங்கும் தருவாய் என்பதைக் கண்டும் கூட, மனக்கிலேசம் ஏதும் இல்லாமல் முத்தநாதன் பஞ்சணையை நெருங்கினான். வாயில் காவலனான தத்தனோ சற்றும் சிந்தியாது செயல்படும் இந்த அடியார்மேல் கவனமாய் இருந்து கொண்டு, வாயில் காவலையும், உள்ளே நிகழ்வதையும் கவனித்துக் கொண்டிருந்தான். ஏனெனில் அவன் ஒரு உண்மையான மெய்க்காப்பாளன். அவன் கடமையில் கருத்தாய் இருந்தான். விழித்தக் கொண்ட அரசர் முத்தநாதனை உண்மையான அடியார்-மெய்வேடத்தான் என நம்பி, கைகளைக் குவித்தபடி வணங்கி, வரவேற்று, 'அடிகள் இங்கு எழுந்தருளிய நோக்கம் என்னவோ' எனக் கேட்டார்.

முத்தநாதன் 'உங்கள் இறைவன்' முன்பு அருளிய ஆகம நூல்களில் இதுவரை யாருக்கும் கிடைக்காத ஒன்று எனக்குக் கிடைத்தது. அதை உமக்குப் போதிப்பதற்காக இங்கு கொண்டு வந்தேன் என்றான். "உங்கள் நாயகனார்" என்று இறைவனை முத்தநாதன் குறிப்பிட்டார் என்கிறார் சேக்கிழார். அவனுக்கு அவர் இறைவர் இல்லை, உங்களுக்குத்தான் இறைவர் என்று அறியாமையால் பேசுகிறான் என்பதை குறிப்பால் உணர்த்தும் வரிகள் இது.

இவ்வுரை கேட்ட மெய்ப்பொருள் நாயனார் 'நான் பெற்ற பேறு இது! வாசித்து அருள்க' என வேண்டி நின்றார். முத்தநாதன் இந்நூல் வாசிக்கும் போது 'மலர்கள் சூடிய உன் மனைவி இங்கு இருக்கக் கூடாது, நீயும் நானும் தனித்து இருக்க வேண்டும்' என்றான். இதை சேக்கிழார் **'நாறு பூங்கோதை மாது தவிரவே, நானும் நீயும் வேறிடத்திருக்க வேண்டும்'** என்று முத்தநாதன் சொல்வதாக பாடி அருளுகிறார்.

நான் உன்னைக் கொல்லப் போகிறேன். அதனால் "மலர்சூடிய உன் மனைவி" - இனிமேல் மலர் சூட முடியாமலும், நீ இறந்து போய்விடப் போவதால், உன்னைத் தவிர்த்தும் இருக்கப் போகிறாள் என்ற குறிப்பும் நான் பூவுலகில் பாவம் செய்து பழி சுமந்து திரியவும், நீ புகழ் பெற்று, இறைவன் கருணையினால் அவன் திருவடிகளில் இருக்கவும் என நீயும் நானும் வேறிடத்து இருக்கப் போகிறோம் என்ற குறிப்பும் தோன்ற-முத்தநாதன் கூற்றாக, கவிஞர் அருளிய பாட்டின் பொருள் அறிந்து மகிழ்வோமாக.

அரசர் தன் மனைவியை அந்தப்புரத்திற்கு அனுப்பிவிட்டு, உயர்ந்த ஆசனத்தில் சிவனடியாராய் வந்த முத்தநாதனை அமர்த்தி, தான் கீழே அமர்ந்து கொண்டு கைகூப்பி வணங்கியபடி 'இனி அருள் செய்க' என்றார். முத்தநாதன் புத்தகக் கட்டைப் பிரிப்பவன் போல் பிரித்து, அவர் வணங்கும் சமயத்தில், கொடுவாளை அவர் உடலில் பாய்ச்சினான் - என்று பாடவில்லை. ஏனென்றால் அருளாளர்களின் வரலாற்றினைப் பற்றி பாடவந்த சேக்கிழார்- ஒரு அடியாரை ஒரு வஞ்சகன் கொன்றான் என்று அமங்கலமாகப் பாட மனமில்லாமல் அவன் நினைத்து வந்த காரியத்தைச் செய்தான் - **"தான் முன் நினைத்த அப்பரிசே செய்ய" - என்கிறார் சேக்கிழார்.**

இப்பொழுது மெய்ப்பொருள் நாயனாரின் நிலை என்ன - அதையும் சேக்கிழார் அழகாகப் பாடுகிறார். "மெய்த்தவ வேடமே மெய்ப்பொருள் என தொழுது வென்றார்" என்று பாடுகிறார். உயிர்போம்போது கூட சிவ வேடம் தாங்கிய சிறுமதியானை தொழுதார்-அதனால் வென்றுவிட்டதாக நினைத்த முத்தநாதனை தோற்கடித்து, உயிர் விட்டாலும் கூட வெற்றியே பெற்றார் என்று பாடும், அருமையை எண்ணி, எண்ணி களிக்கவும். வாளால் குத்தப்பட்டு கீழே சாயும்போது கூட மனதில் வஞ்சம் வைத்த முத்தநாதனை, அவனுடைய மெய்த்தவ சிவவேடத்தை உண்மை என்றே நம்பியபடியே கீழே சாய்ந்தார். கண்ணும் கருத்துமாய் நின்ற காவலனான தத்தன் உடனே அறையினுள் புகுந்து ஒரு கையால் சாயும் அரசரைத் தாங்கிக்

கொண்டு, மறு கையால் வாளால் முத்தநாதனை வெட்டிச் சாய்க்க எத்தனித்தான். அது கண்ட நாயனார் "தத்தா-நமர்" "தத்தா-நமர்" என்ற சொற்றொடர் மிக அருமையானது. (தத்தா - அவர் நமக்கு வேண்டப்பட்டவர் என்று கூறினார்.) 'நமர்' என்றால் - நம்மவர் என்று விரியும். நம்மவர் என்று ஏன் சொன்னார் எனக்கு மட்டுமல்ல அவர் உனக்கும் வேண்டியவர் என்று கூறுகிறார். தத்தனும்-தனக்கும் வேண்டியவர் என்று ஏன் கருத வேண்டுமாம் அப்படி நினைத்தால் தான் - அரசர் கூறப் போகும் அடுத்த வேலையை ஒழுங்காகச் செய்ய முடியும். எனக்கு வீடுபேறு கிடைக்கச் செய்தவன் ஆகையால் அவன் எனக்கு வேண்டியவன், எனக்கு வேண்டியவர்களை உண்மையான வேலையாள், தனக்கும் வேண்டியவனாகத்தான் நினைக்க வேண்டும் என்பதைக் காட்டும் அற்புதச் சொற்றோடரை இறையருளால் அருளிய அருமை கண்டு வியப்போம்.

உண்மை ஊழியனான தத்தன், 'நான் இனி என்ன செய்யவேண்டும்' என்று கேட்டான். அரசர் 'எம்பிரான் அடியராகிய இவருக்கு எந்தக் கெடுதலும் ஏற்படாதபடி காத்து வெளியில் கொண்டுபோய் பாதுகாப்பான ஒரு இடத்தில் விட வேண்டும்' என்றார். அரசருக்குத் தீங்கு நேர்ந்தது அறிந்து ஓடி வந்தவர்களை எல்லாம் தத்தன் தடுத்து 'இந்தத் தவவேடத்தானை பத்திரமான இடத்தில் தீங்கின்றி கொண்டு விடும்படி அரசர் உத்தரவிட்டுள்ளார்' என அறிவித்து; முத்தநாதனை நல்லவழிகளில் அழைத்துச் கொண்டுபோய், நகரைக் கடந்து, அவனுக்கு ஆபத்து ஏற்படாத பாதுகாப்பான இடத்தில் விட்டுவிட்டு, அரண்மனைக்கு வந்து சேர்ந்தான். பத்திரமான இடத்திற்கு முத்தநாதன் போய் சேர்ந்தான் என்ற சேதியைக் கேட்டவுடன் மெய்ப்பொருள் நாயனார் ஆனந்தம் பொங்க! அகம் மகிழ! தத்தனைப் பார்த்து "ஐயனே! இன்றைக்கு நீ செய்த உதவியைப் போல் யார் செய்வார்" என்று பாராட்டி கருணை பொங்க, புன் முறுவல் செய்தார்.

அதன்பின் நாயனார் தன் உறவினர்கள், அரசாளத் தக்கவர்கள் அனைவரையும் அழைத்து; நீங்கள் அனைவரும்

திருநீற்றுத் தொண்டு புரிந்து, திருநெறியைப் பின்பற்றி நடந்து பாதுகாத்து, உலகியல் நடைமுறைப்படி அரசாட்சி செய்து வாருங்கள் என்று கூறி, தில்லை எம்பெருமான் திருவடிகளைச் சிந்தித்தார்.

மனக்கண்ணால் இதுவரை கண்டு மகிழ்ந்து வந்த நாயனாருக்கு நடராஜப் பெருமான் தனது திருநடன ஆனந்தக் காட்சியை காட்டி அருளினார். அத்தோடு தன் திருவடிகளிலேயே இருந்து, நீங்காது அப்பேரின்பத்தை பருகும் பேற்றினையும் நல்கினார்.

ஒரு பாவ காரியமான கொலையைச் செய்ய, புனிதமான சிவனடியார் வேடம் துணை செய்யும் என்று நம்பி அவ் வேடம் போட்டான் முத்தநாதன். நம்பிய அவன் எண்ணம் ஈடேற அவ்வேடம் உதவியது. அதன் பின் ஒரு கொலை புரிந்தவனாயிருந்தாலும் கூட; அவன் பொய்யாய் போட்ட வேடமும் அவன் உயிரையும் காப்பாற்றி உதவியது. இவன் பின் வரலாறு சொல்லப்படாவிட்டாலும் கூட, இவன் இதற்கு மேல் கெட்டவனாய் நிச்சயம் வாழ்ந்திருக்க மாட்டான். இந்த வேடமே இவனுக்கு நிரந்தரமாயிருந்திருக்கும். தன் உயிர் போகும்போதும் கூட; பொய்யாய் போட்டாலும், மெய்யாய் போட்டாலும் சிவனடியார் வேடத்தை மெய் எனவே நம்பி வாழ்ந்து சிவனருள் பெற்று உய்ந்த ‘மெய்ப்பொருள் நாயனார்’ திருவடிகளை சிந்தித்து சிறப்புப் பெறுவோமாக.

கிடைத்தற்கு அரியது மானிடப் பிறவி. ஏனெனில் இறைவன் உயிராகிய ஆன்மாக்களுக்கு, மும்மலங்களால் கட்டுண்டு கிடக்கும் உயிர்களுக்கு; விடுதலை பெற ஒரு வாய்ப்பைத் தருகிறான். எப்படி ‘புல்லாய் பூடாய் புழுவாய், மரமாகி, பல் விருகமாகி, பறவையாய், பாம்பாகி; கல்லாய் மனிதராய்’ என்ற திருவாசகத்தின் படி; ஓர் அறிவு உயிராகப் பிறப்பைத் தொடங்கி, ஆறறிவு உயிராகி நாம் நிற்கிறோம். ஓர் அறிவு உயிர் தொடங்கி ஐந்து அறிவு உயிர்வரை மறுபிறவி இல்லை. ஒவ்வொரு பிறவி மட்டுமே. ஆறறிவு ஜீவனாகிய மனிதன் மட்டுமே பலகாலம்/பலமுறை பிறவி எடுத்து,

துன்பப்படுகிறான். ஏன் இப்படி? ஐந்தறிவு உயிர்வரை எந்த உயிரும் 'வினை' செய்வதில்லை.

மிருகங்களுக்கு பய உணர்ச்சி இல்லை. அடுத்து வரும் பசிக்கு என்ன செய்வது என்ற பயம் இல்லை. ஆதலால் அவை சேமிப்பதில்லை. மனிதனுக்கு மட்டுமே வாழ்க்கையைப் பற்றிய பயம், எப்போதும் இருந்து கொண்டே இருக்கிறது. வாழ்கின்ற வாழ்க்கைக்கு உள்ளவைகள் போதாது என்ற எண்ணத்தாலும், தனக்குப் பின்னும் தனது சந்ததிகள் சுகமாக வாழ வேண்டும் என்பதற்காகவும், வீண் பெருமைக்காகவும், வாழும் வாழ்க்கை நிலைத்திருக்க வேண்டுமே என்ற பயத்தின் காரணமாகவும், மேலும் மேலும் வினை செய்கிறான். நாளைக்கு வேண்டும் என்ற எண்ணம் இல்லாததால் - ஒன்று முதல் ஐந்து அறிவு உயிர்கள் 'வினை' செய்வதில்லை. கிடைத்ததை உண்டு, நினைத்த இடத்தில் வாழ்ந்து மறைந்து விடுகின்றன.

தனக்கே எதையும் தேடாதபோது, தன் சந்ததிக்காக என்று எந்தச் செயலையும் (வினையையும்) அவைகள் செய்வதில்லை. இயற்கையின் உந்துதலாய் இணை சேர்வதையும், குட்டிகளைப் பராமரிப்பதையும் கணக்கில் கொள்ளக்கூடாது. கொலை, களவு, வஞ்சம், களவு, ஏமாற்றுதல் என்று இல்லாமல் அவைகள் வாழ்ந்து மறைவதால் அவைகளுக்குப் புதிய வினைகள் இல்லை. முன் செய்த வினைக்கு ஈடாக வழங்கப்பட்ட வாழ்வை அவை வாழ்ந்து முடித்து விடுகின்றன. **ஆகவே ஒன்று முதல் ஐந்து வரை உள்ள உயிர்களுக்கு மறுபிறவி இல்லை. அவைகள் ஒரு முறை மட்டுமே பிறப்பெடுக்கின்றன.**

ஆனால் மனிதனுக்கு மட்டுமே இறைவன் ஒரு அறிவை- பகுத்தறிவைச் சேர்த்து வழங்கி இருக்கிறான். இந்த அறிவைப் பயன்படுத்தி - தன்னை அறிந்து கொள்ள முயலுபவன் மட்டுமே, அடுத்தடுத்து, அந்த அந்த நிலையிலிருந்தும் உயர்ந்து உயர்ந்து இறைவன் அருளைப் பெறுகிறான். உலகியலில் மூழ்கி, தான் எதற்கு பூமிக்கு வந்தோம் என்பதை மறந்து, செலவழிக்க (வினையை) வந்தவன், சேமிக்கத்

தொடங்கி (வினைகளை) விடுகிறான். இதனால் பழைய+புதிய வினைகளின் விளைவாக அவ்வினைகளுக்கு ஏற்ப பலப்பல பிறவிகளைப் பூமியில் தொடர்கிறான். “பிறப்பதுவே தொழிலாகி-இறக்கின்றாரே” என இத்தகைய உயிர்களைப் பார்த்துப் பாடுகிறார் ஒரு அடியார். முத்தநாதனையும், மெய்ப்பொருள் நாயனாரையும் சிந்தியுங்கள்! பிறவியை ஈடேற்றும் மார்க்கம் கண்டு வாழுங்கள்! கடவுளை நம்பினோர் கைவிடப்படார்!

*தேடிய மாடு நீடு செல்வமும் தில்லை மன்றுள்*
*ஆடிய பெருமான அன்பர்க்கு ஆவன ஆகும் என்று*
*நாடிய மனத்தினோடு நாயன்மார் அணைந்த போது*
*கூடிய மகிழ்ச்சி பொங்கக் குறைவறக் கொடுத்து வந்தார்*

**அடுத்த இதழில் விரிபொழில் சூழ் குன்றையார் விறன்மிண்ட நாயனார் வரலாற்றினைப் பார்ப்போம்.**

திருச்சிற்றம்பலம்

# கல்விக் காவலர்கள்

1. **மே 2004 : முதல் கல்விக் காவலர், ஆமலூருடையார், தெய்வத்திரு. வெ.ராம. சுப்பிரமணியன் செட்டியார் - அன்னபூரணி ஆச்சி அவர்கள், அம்மன் குறிச்சி, சென்னை.**
2. ஜூலை 2004 : மேலூருடையார், **திரு. தே.மா. பழனிச்சாமி செட்டியார் - திருமதி. சரஸ்வதி ஆச்சி** அவர்கள், பொன்னமராவதி.
3. செப்டம்பர் 2006 : கழனிவாசலூருடையார் **திரு.நா. சுப்பிரமணியன்** BSc., CAIIB **திருமதி. தமிழ்ச்செல்வி** B.Lit., அவர்கள், கல்லம்பட்டி, சென்னை.
4. **மார்ச் 2007 : நாவலூருடையார், திரு. ச. கனகசபை B.E., மனோரஞ்சிதம்** அவர்கள், உலகம்பட்டி, திருச்சி.
5. ஜூலை 2007 : கழுகக்கூருடையார், **தெய்வத்திரு. இராம. வேலாயுதம் செட்டியார் - பார்வதி ஆச்சி** அவர்கள், படமிஞ்சி, சென்னை.
6. நவம்பர் 2007 : கழனிவாசலூருடையார், **தெய்வத்திரு. மு.சி.கி. நாராயணன் செட்டியார் - இராஜமாணிக்கம் ஆச்சி** அவர்கள்,கல்லம்பட்டி.
7. மே 2010 : சிக்கலூருடையார், **தெய்வத்திரு. நல்லாசிரியர் மெ. இளங்கோ - சாவித்திரி** அவர்கள். வா.புதூர்.
8. ஜூலை 2011 : அரும்பாக்கிளையார். திரு. **M.M. தியாகராஜன் B.Sc., தெய்வத் திருமதி. ஜோதிமணி** அவர்கள் புழுதிப்பட்டி. மதுரை.
9. ஜனவரி 2012 : பொன்னமராவதி பூண்டிலூருடையார். தெய்வத்திரு. மா. தங்கராஜன் - அழகுமீனாள் அவர்கள், புழுதிபட்டி பெங்களூரு.
10. மார்ச் 2012 : கழுகக்கூருடையார். **தெய்வத்திரு. மு.ஆ. இராமசாமி செட்டியார். தெய்வத்திருமதி. இராஜாமணி ஆச்சி,** சொக்கம்பட்டி.
11. மே 2012 : நாவலூருடையார், **திரு. ச. சொக்கலிங்கம் செட்டியார் - தெய்வத்திருமதி. தனபாக்கியம் ஆச்சி** அவர்கள் உலகம்பட்டி.
12. **ஜூலை 2012 : கழனிவாசலூருடையார். திரு. P.L. இராமஜெயம், பத்மாவதி அவர்கள், பொன்னமராவதி.**
13. செப்படம்பர் 2012 : கழுகக்கூருடையார். **தெய்வத்திரு.** M.S.M. **மாணிக்கம் செட்டியார் - சரஸ்வதி ஆச்சி** அவர்கள், பொன்னமராவதி.
14. **நவம்பர் 2012 : பணப்பாக்குழுருடையார். தெய்வத்திரு. கு. சொக்கலிங்கம் செட்டியார் - சொ. தேனம்மாள் ஆச்சி, செம்பூதி.**
15. மார்ச் 2013 - அரும்பாக்கிளையார், **தெய்வத்திரு. இராம. கதிரேசன் செட்டியார். திருமதி.முத்துலெட்சுமி ஆச்சி,** புழுதிப்பட்டி.
16. **மே 2013 : மேலூருடையார். தெய்வத்திரு. தே.மா. நாராயணன் செட்டியார் - சண்முகவள்ளி ஆச்சி,** பொன்னமராவதி.
17. ஜூலை 2013 : பூதமங்கலமூருடையார். **திரு. ச. இராமலிங்கம் - இராஜமாணிக்கம்,** அயனாவரம். சென்னை.
18. நவம்பர் 2013 : ஆமலூருடையார். **திரு. வெ.இராம.சுப. துரைராசு செட்டியார் - மீனாட்சி ஆச்சி,** அம்மன்குறிச்சி, சென்னை

19. ஜனவரி 2014 : நாவலூருடையார். **தெய்வத்திரு. அரு. வேலாயுதம் செட்டியார் – சம்பூர்ணம் ஆச்சி,** பொய்யாமணிப்பட்டி.

**20. மார்ச் 2014 : பூதமங்கலமுருடையார். திரு. R. பரமசிவம் B.E., தெய்வத்திருமதி. சிவகாம சுந்தரி, பொன்னமராவதி, சென்னை.**

**21. ஜனவரி 2015 : பூதமங்கலமுருடையார். திரு. அ.சொ. சண்முகம் செட்டியார் – ஜெயபாரதி ஆச்சி, அம்மன்குறிச்சி, திருச்சி.**

**22. மார்ச் 2015 : அரும்பாக்கிளையார். திரு. A.P. ஜெயபால் – புவனேஸ்வரி, பொன்னமராவதி, ஈராடு.**

23. ஏப்ரல் 2015 : கழுகக்கூருடையார், **தெய்வத்திரு. ம.வெ. நாராயணன் செட்டியார் – மீனாட்சி ஆச்சி** உலகம்பட்டி.

24. ஏப்ரல் 2015 : நாவலூருடையார். **திரு. சித. நடராஜன் செட்டியார், தெய்வத்திருமதி. இராஜம்மாள் ஆச்சி,** பொய்யாமணிப்பட்டி.

25. மே 2015 : நாவலூருடையார். **திரு. அரு.வே. மாணிக்கவேலு – சரஸ்வதி,** பொன்னமராவதி.

**26. ஜுலை 2015 : ஆமலூருடையார். திரு. வெ.இராம.சுப. செல்வம்** B.Sc., ACA., **– ஆனந்தம் ஆச்சி, அம்மன்குறிச்சி, சென்னை.**

27. ஜனவரி 2016 : அரும்பாக்கிளையார், தெய்வத்திரு. **மங்கைபாகன் செட்டியார் – சிகப்பி ஆச்சி,** புழுதிப்பட்டி.

28. மே 2016 : கழுகக்கூருடையார், **திரு. சி.சொ.மு. இராமையா செட்டியார் – தெய்வத்திருமதி. ஜெகநாதம் ஆச்சி,** கொன்னைப்பட்டி, தேனி.

29. செப்டம்பர் 2017 : ஆமலூருடையார். **திரு. வெ.இராம.சுப. நேசமணி செட்டியார் – அருள்நிதி புவனேஸ்வரி ஆச்சி,** அம்மன்குறிச்சி, சென்னை.

30. ஜனவரி 2018 : பணப்பாக்கூருடையார் **தெய்வத்திரு. சுப. மணிவாசகம் செட்டியார் – தேன்மொழி ஆச்சி,** காரைக்குடி.

31. செப்டம்பர் 2018 : கழுகக்கூருடையார் **திரு. சோம. கதிரேசன் செட்டியார் – தவமணி ஆச்சி,** பொன்னமராவதி, தொட்டாம்பாளையம்.

32. ஜுலை 2019 : அரும்பாக்கிளையார் **திரு. பொன். சிவஞானம் செட்டியார் – ராஜகுமாரி ஆச்சி,** சிறுகுடி.

**33. ஆகஸ்ட் 2019 : நாவலூருடையார் தெய்வத்திரு. சித. மாணிக்கம் செட்டியார் – அழகுமீனாள் ஆச்சி, பொய்யாமணிப்பட்டி.**

**34. ஆகஸ்ட் 2019 : வரதலூருடையார் ந. செல்வம் செட்டியார் – சிவயோகம் ஆச்சி, புழுதிபட்டி / கோவை.**

**35. ஜனவரி 2020 : பழனி ஆதிசைவ அன்னதான மடம் – அருள்மிகு பழனி ஆண்டவர் அறக்கட்டளை, பழனி.**

36. மார்ச் 2020 : மேலுருடையார் **தெய்வத்திரு. செ.பெ.அ. அலங்காரம் செட்டியார் – திருமதி. செம்பாயி ஆச்சி,** சிறுகுடி.

**37. அக்டோபர் 2020 :** பொன்னமராவதி **பூண்டிலூருடையார்**
**திரு. சி. வெள்ளனச்சாமி செட்டியார் - திருமதி. சாந்தி ஆச்சி, சிறுகுடி / கோவை.**

**38. டிசம்பர் 2020 : கழனிவாசலூருடையார் கிருங்காக்கோட்டை**
**திரு.** V. **லட்சுமணன் செட்டியார் - பாக்கியலட்சுமி ஆச்சி தம்பதியர்**

**39. மே 2021 :** மேலூருடையார் **செம்பூதி/பொன்னமராவதி** தெய்வத்திருவாளர்கள்
**தே.மா. சுப்பையா செட்டியார்- சுப. பூங்கோதை ஆச்சி தம்பதியர்**

# பெண்ணிற்கு நம் முன்னோர்கள் தந்த முக்கியத்துவம்

ஹிந்து சம்பிரதாயங்களில் இல்லறவாழ்வின் மேன்மையை சிறப்பிக்கும் வகையில் ஒரு பெண்ணுக்கு நமது முன்னோர்கள் தந்த முக்கியத்துவம் வெகு சிறப்பான ஒன்று.

1. திருமணம் ஆகாத தனி மனிதனுக்கு சபையில் உயர் அங்கீகாரம் கிடையாது.
2. மனைவி இல்லாதவன் யாகம் செய்யக்கூடாது.
3. மனைவி இல்லாதவன் கும்பாபிஷேகம் போன்ற யாகங்களில் பங்கேற்க்க தகுதி கிடையாது.
4. மனைவி இல்லாதவன் தானம் செய்ய முடியாது.
5. மனைவி இன்றி செய்யும் தானம் பலன் தராது.
6. மனைவி இல்லாதவன் பித்ரு கடன்களை செய்ய வாய்ப்பற்றவன்.
7. மனைவி இல்லாதவன் கோயில் உள்ளே சென்று ஸ்வாமியை பூஜை செய்ய அருகதை அற்றவன்.
8. மனைவி இல்லாதவன் பஞ்சாயத்தில் தலைமையாக உட்காரும் தகுதி இல்லாதவன்.
9. மனைவி இல்லாதவன் நேரில் வந்தால் சகுனப் பிழை என பொருள்.
10. மனைவி இல்லாதவனுக்கு ஆகமங்களின்படி ஆச்சார்ய தீக்ஷை கிடையாது.
11. மனைவி இல்லாதவனுக்கு கும்ப மரியாதை கிடையாது.
12. மனைவி இன்றி ஒற்றை நபராக புண்ணிய தீர்த்தம் ஆடுதல் கூடாது.
13. மனைவி இன்றி பெரியோர்களை நமஸ்கரிக்கக் கூடாது.
    அதாவது முழு பலன் இல்லை என்பதாகும்.
14. மனைவி இன்றி ஒற்றை நபராக பசுவை வணங்கக்கூடாது.
15. மனைவி இல்லாதவன் கோயில் விழாக்களில் காப்பு கட்டிக் கொள்ள தகுதி கிடையாது.

இப்படி பல பல நியதிகள் உள்ளது. இவை இல்லற வாழ்வியல் அல்லது அந்நிலை சூழலில் உள்ளவர்களுக்கே. மனைவி என்ற பெண் உடன் இல்லையெனில் ஒரு ஆண் வெறும் ஜடமே என்று சொல்லாமல் சொல்லி இருக்கிறார்கள். எந்தவிதமான சாஸ்திர மரியாதை சிறிதும் கிடையாது.

**- சுப. இராஜகோபால், நங்கநல்லூர்**

# அ.வ.ந. புதிய நிர்வாகிகள் பதவியேற்பு, கல்வெட்டு திறப்புவிழா நிகழ்வுகள்

நாள்: 22.04.21



கும்பாபிஷேக நன்கொடையாளர்கள் கல்வெட்டு திறப்புவிழா



முன்னாள் தலைவர் Er. M. சண்முகம் படத்திறப்பு



செயற்குழு உறுப்பினர்கள்



கும்பாபிஷேகவிழா மலர் வெளியிடுதல்



மக்கள் தொகை கணக்கெடுப்பு வெளியிடுதல்













பொதுநலச் சங்க புதிய நிர்வாகிகள் பதவியேற்பும், பாராட்டுதலும்...

வாழ்க வளமுடன் மங்கைபாகர் – தேனம்மை துணை வாழ்க நலமுடன்





**Rtn.PHF.Er.M.SETHURAMAN** B.E., MBA., NEBOSH (Dubai-UAE)
IOSH, DSM, DIFSM, MD (Acu), D.Astro, Ex.TNSTC.Ltd.

**S.SHANTHI** B.Com.,

**S.VIJAY** B.E., ABUDHABI, UAE

**CELL : 81223 80075**

www.vijayguesthouse.com








- DELUXE AC ரூம்கள்
- AC ரூம்கள்
- NON AC ரூம்கள்
- பெரிய HALL வசதி
- 24 Hrs WIFI இன்டர்நெட் வசதி
- ஒவ்வொரு ரூமிலும் TV வசதி
- ATTACHED BATHROOMS
- WESTERN TOILETS



# VIJAY GUEST HOUSE

## (LODGE)

**NEAR BUS STAND, MANAPPARAI.**

**குறைவான கட்டணத்தில், நிறைவான வசதிகளுடன்**

**தரமான தங்கும் விடுதி**

# திருமணத்திற்கு நாள் பார்க்கும் போது கவனத்தில் கொள்ளவேண்டிய விதிகள்

திருமணம் பந்தமென்பது ஆயிரம் காலத்து பயிர் போன்று சிறப்பாக அமைந்திட ஜாதகம் பார்த்து முடிவு செய்தாலும் திருமணவாழ்க்கை நல்லபடியாக அமைவதற்கு நல்லநாள் பார்க்கின்றோம். அதுபற்றி நாம் ஓரளவு தெரிந்து கொள்ளலாம்.

**முதல் விதி** : திருமணம் மலமாதத்தில் இடம் பெறக்கூடாது. மலமாதம் என்பது இரண்டு அமாவாசை அல்லது இரண்டு பௌர்ணமி ஒரே மாதத்தில் வருவது.

**இரண்டாவது விதி** : சித்திரை, வைகாசி, ஆனி, ஆவணி, தை, பங்குனி தவிர இதர மாதங்களில் திருமணம் செய்வதைத் தவிர்ப்பது நல்லது.

**மூன்றாவது விதி** : இயன்றவரை சுக்கில பட்ச காலத்திலேயே திருமணம் செய்வது நல்லது.

**நான்காவது விதி** : புதன், வியாழன், வெள்ளி போன்ற சுபஆதிபத்தியமுடைய கிழமைகள் மிக ஏற்றவை. இதர கிழமைகள் அவ்வளவு உகந்தவை அல்ல... ரிஷபம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி, துலாம், தனுசு, மீனம் ஆகிய சுப லக்கினங்களில் மட்டுமே திருமணம் நடத்த வேண்டும்.

**ஐந்தாவது விதி** : துவிதியை, திரிதியை, பஞ்சமி, ஸப்தமி, தசமி, திரயோதசி ஆகிய திதிகள் தவிர இதர திதிகளைத் தவிர்க்கவும்.

**ஆறாவது விதி** : முகூர்த்த லக்கினத்துக்கு 7-ஆம் இடம், முகூர்த்த நாளன்று சுத்தமாக இருக்க வேண்டும்.

**ஏழாவது விதி** : அக்கினி நட்சத்திரம், மிருத்யூ பஞ்சகம், கசரயோகங்கள் போன்ற காலகட்டத்தில் திருமணம் நடத்தக் கூடாது.

**எட்டாவது விதி :** திருமணத்தின்போது குரு, சுக்கிரன் போன்ற சுபகிரகங்கள் திருமண லக்கினத்துக்கும் மணமக்களின் ஜனன ராசிக்கும் எட்டாம் வீட்டில் இடம் பெற்றிருக்கக் கூடாது.

**ஒன்பதாம் விதி :** திருமணநாள் மணமக்களின் சந்திராஷ்டம் தினமாக இல்லாமல் இருப்பது மிகமிக முக்கியமான விதி.

**பத்தாம் விதி :** மணமக்களின் ஜனன நட்சத்திர நாளிலும் 3, 5, 7, 12, 14,16, 21, 23, 2-வதாக வரும் நட்சத்திர தினங்களிலும் திருமணம் நடத்தக் கூடாது.

**பதினொன்றாம் விதி :** கடைசியாக மணமக்களின் பிறந்த தேதி அல்லது கிழமைகளிலும் கல்யாணம் பண்ணக்கூடாது.

இவ்வளவு விஷயங்கள் தெரிந்து கொண்டபின் நீங்களே அனைத்து சுபகாரியங்களுக்கும் நல்ல நாள் பார்த்து விடுவீர்கள் தானே. அவரவர் குலதெய்வத்தை மனதில் வேண்டிக்கொண்டு உங்கள் வீட்டில் உள்ள பெரியவர்களின் ஆசியுடன் நல்லதொரு நாளைக் குறியுங்கள். அனைத்துக் காரியங்களும் தடையின்றி இனிதே நிறைவேறிட இறைவன் அருள் பூரணமாக கிடைக்கும்.

**- சுப. செல்வம், குரல் ஆசிரியர்**

# பூப்புனித நீராட்டு விழா



பொன்னமராவதி அரசு மெடிக்கல்ஸ் திரு. S. ராஜா அவர்களின் தம்பி திரு.S.மணிகண்டன் -சுகந்தப்பிரியா இவர்களது மகள் **செல்வி. விசாலா என்கிற அபர்ணாவிற்கு** 18-04-2021 ஞாயிற்றுக்கிழமை அன்று பொன்னமராவதி மங்கை நாயகர் திருமண மண்டபத்தில் பூப்புனித நீராட்டு விழா நிகழ்ச்சி சிறப்பாக நடைபெற்றது. அவ்வமயம் சுற்றத்தார்களும், நண்பர்களும் கலந்துகொண்டு செல்வி அபர்ணாவை வாழ்த்தினார்கள்.

**தகவல்: திருமதி. RA. விசாலா, நங்கநல்லூர், சென்னை.**

# புதுமண தம்பதிகள்

**மணமக்கள் :**

செல்வன் **V.ராஜேஷ்** B.B.A.–செல்வி**. D. கீர்த்திகா** B.Sc.,

**மணமகனின் பெற்றோர் :**



திரு. **M. வைரவன்** செட்டியார் – **V.** லெட்சுமி ஆச்சி, பொன்னமராவதி.

**மணமகளின் பெற்றோர் :**

திரு. **M. தனபால் செட்டியார் – D. பூங்கோதை ஆச்சி**, பட்டுக்கோட்டை.

**நிகழ்விடம் :** மங்கைநாயகர் மன்றம் பொன்னமராவதி.

**மணநாள் : 15-03-2021 திங்கட்கிழமை.**

---



**மணமக்கள்:** செல்வன். **ந. நல்லமருது** B.E. செல்வி. **இரா. ஹேமச்சந்திரிகா** M.C.A.

**மணமகனின் பெற்றோர் :**

திரு. **V.S. நல்லமருது செட்டியார்** –

திருமதி. **ந. மல்லிகா ஆச்சி** கோயமுத்தூர்.

**மணமகளின் பெற்றோர்:**

திரு. **மு. இராமலிங்கம் செட்டியார்** திருமதி. **சே. இராமதிலகம் ஆச்சி** பொன்னமராவதி.

**நிகழ்விடம் :** மணமகள் இல்லம், பொன்னமராவதி

**திருமண நாள் : 24-05-2021,** திங்கட்கிழமை.

---

## *மணிவிழா*



கட்டுக்குடிபட்டியைச் சேர்ந்த கமுகக்கூருடையார் **திரு. சிவ. மாணிக்கம் செட்டியார் - திருமதி. அன்புச் செல்வி ஆச்சி** அவர்களின் **60**-வது ஆண்டு நிறைவு மணிவிழா 15-04-2021 அன்று பிரான்மலை மங்கை நாயகர் மண்டபத்தில் உறவினர்களும், நண்பர்களும் வாழ்த்த சிறப்பாக நடைபெற்றது.

**தகவல்: திரு. A.S. முருகேசன், சென்னை.**

# புதிய கல்விக்காவலர்கள்

**கல்விக்காவலர்-36**



மேலூருடையார்
தெய்வத்திரு செ. பெ.அ. அலங்காரம் செட்டியார்
(எ) சேதுராமன் செட்டியார்-செம்பாயி ஆச்சி.

**கல்விக்காவலர் குடும்பத்தினர்**

**பெற்றோர் :**
தெய்வத்திரு செ.பெரிய அலங்காரம் செட்டியார்-
பாப்பாத்தி ஆச்சி

**மகள்கள் - மருமகன்கள் :**
திருமதி திலகம் ஆச்சி - இளங்கோ செட்டியார்
திருமதி யோகாம்பாள் (எ) கீதா - திருவாசகம்

**பேரன், பேத்திகள் :**
திருமதி இ. நாகேஸ்வரி (எ) சுகண்யா - ராகுல்
இ. நாகார்ஜுன், தி. வித்யஸ்ரீ, ரா. ஆராத்யா
என்றென்றும் வாழ்க வளமுடன்!

**கல்விக்காவலர்-37**



பொன்னமராவதி பூண்டிலூருடையார்
**சி. வெள்ளச்சாமி செட்டியார் -**
**திருமதி சாந்தி ஆச்சி.**

**கல்விக்காவலர் குடும்பத்தினர்**

**பெற்றோர் :**
தெய்வத்திரு ந. சிவசாமி செட்டியார் -
நலமுடன் செண்பக ஆச்சி

**மகன்-மருமகள் :**
வெ. வினோத்குமார் BBM- ஞானசௌந்தர்யா B.Sc.
வெ. விவேக்குமார் B.Com., MBA- காயத்ரி B.E.

**பேரன்-பேத்திகள் :**
வி. ரிஷிகாஸ்ரீ, வி. ரித்திக்ஸ்ரீ

**கல்விக்காவலர்-38**



கழனிவாசலூருடையார்
**திரு.V. லெட்சுமணன்செட்டியார்**
**பாக்கியலட்சுமிஆச்சி**
கிருங்காக்கோட்டை

**பெற்றோர் :** திரு சொ.வைத்திங்கம் செட்டியார்
- திருமதி அழகு ஆச்சி

**மாமனார்-மாமியார் :**
திரு. சிவசாமி செட்டியார்-குஞ்சரம் ஆச்சி, பூசாரிபட்டி

**உடன்பிறந்தவர்கள் :**
1. தெய்வத்திரு V.மங்கைபாகன்செட்டியார்-நலமுடன் பொன்னழகுஆச்சி
2. தெய்வத்திரு V. வைத்திங்கம்செட்டியார் - பாஞ்சாஆச்சி
3. தெய்வத்திரு V. ராமன்செட்டியார் - மங்களம்ஆச்சி
4. தெய்வத்திரு V. பரமசிவம்செட்டியார் - நலமுடன்கலாதேவிஆச்சி
5. திருV.ஆறுமுகம்செட்டியார்-சாந்தாஆச்சி, கோவை.

**கல்விக்காவலர்-39**

**பெற்றோர் :** திரு. தே. மாணிக்கம் செட்டியார்-
தேனம்மாள் ஆச்சி



மேலூருடையார்
**தே.மா.சுப்பையா**
**செட்டியார்-**
**சுப.பூங்கோதை ஆச்சி,**
பொன்னமராவதி.

**மாமனார் :** திரு. A.V.சேதுராமன் செட்டியார்
**மாமியார் :** சிவஜோதி ஆச்சி, பொன்னமராவதி.

**உடன் பிறந்தவர்கள் :**
1. வாழ்வுநிறை அ.சிவபாக்கியம் ஆச்சி - அண்ணாமலை செட்டியார்
2. வாழ்வுநிறை ஏ. மீனாம்பாள் ஆச்சி - ஏகாம்பரம் செட்டியார்.
3. வாழ்வுநிறை தே.மா. சண்முகம் செட்டியார் - ஞானம்பாள் ஆச்சி
4. வாழ்வுநிறை தே.மா. நாராயணன் செட்டியார் - நலமுடன்
நா. சண்முகவள்ளி ஆச்சி. பொன்னமராவதி.
5. திரு.தே.மா.பழனிச்சாமி செட்டியார்-சரஸ்வதி ஆச்சி,
பொன்னமராவதி.

# உங்கள் பேஸ்டில் உப்பா? சர்க்கரையா?



செந்தாமரை

அன்றாடம் நாம் காலையில் எழுந்தவுடன் முதலில் செய்யும் வேலை பல் துலக்குவதுதான். நம்மில் பெரும்பாலானோர் பயன்படுத்துவது உலகின் பல் மருத்துவர்களால் பரிந்துரைக்கப்படும் No.1 கம்பெனியின் பற்பசை என்று விளம்பரப்படுத்தப்படும் பற்பசையைத் தான். என்றாவது ஒரு நாள் நீங்கள் இந்த பற்பசையில் உள்ள பொருட்கள் (Ingredients) ஐ படித்து பார்த்துள்ளீர்களா? படித்தால் இனிமேல் நீங்கள் பற்பசைகளைப் பயன்படுத்த மாட்டீர்கள். இனிப்பு சுவைக்காக சாக்கரின், நுரை வருவதற்கான இரசாயன போம்கள் மற்றும் கரையை நீக்கும் என்று சொல்லக்கூடிய சோடியம் லாரைல் சல்பேட் ஆகியவை சேர்க்கப்படுகின்றன. இந்த சோடியம் லாரைல் சல்பேட்டைத்தான் நம் ஊர்களில் மெக்கானிக் கடையின் தரையில் உள்ள மோசமான அழுக்குகளை நீக்க பயன்படுத்துகிறார்கள்! சிகரெட்டில் உள்ள 'நிக்கோடின்' என்னும் பொருளும் சேர்க்கப்படுகிறது. இதுவே நாம் ஒரு குறிப்பிட்ட பற்பசையை மட்டும் விரும்புவதற்கு காரணமாக இருக்கிறது.

நம் முன்னோர்கள் உப்பு, கரி, ஆலங்குச்சி, வேப்பங்குச்சி போன்றவற்றை பயன்படுத்தி பல் துலக்கி பற்களை உறுதியாகவும், எந்தவித பல் பிரச்சனைகளும் இல்லாமலும் வைத்திருந்தனர். அப்போது இன்னுமா கரி, உப்பை பயன்படுத்தி பல் துலக்குகிறீர்கள் எங்கள் No.1 பற்பசையையே பயன்படுத்துங்கள் என்று விளம்பரப்படுத்திய கம்பெனிகள் இன்று உங்கள் பேஸ்டில் உப்பு இருக்கின்றதா? என்று கேட்கின்றனர். இந்த பற்பசைகளைப் பயன்படுத்த ஆரம்பித்த பிறகுதான் பற்களில் அதிக தொந்தரவுகள் ஏற்படுகின்றன.

அப்படியானால் எதைப் பயன்படுத்தி பல் துலக்குவது என்ற கேள்வி எழலாம். முடிந்தவரை நாம் வீட்டிலேயே பல்பொடி தயாரிக்கலாம். அல்லது வெளியில் கிடைக்கக்கூடிய தரமான பல் பொடிகளை பயன்படுத்தி பயன் பெறலாம்.

"ஆலும் வேலும் பல்லுக்கு உறுதி," "பல் போனால் சொல் போச்சு" என்பது நம் முன்னோர்கள் கூற்று. இயற்கை பல்பொடிகளைப் பயன்படுத்தி நம் பற்களை உறுதியாகவும் தூய்மையாகவும் வைத்து சிறப்பாக வாழ்வோம்.

வாழ்க வளமுடன்! வாழ்க வையகம்!!

**- அக்குஹீலர் திருமதி செந்தாமரை சேது. செல்: 95669 99128**

# மஹா சிவராத்திரி படையல் விழா



சொக்கம்பட்டி கல்வாச நாட்டு சுந்தரபாண்டியபுரத்து நன்னெறி பூண்டிலூருடையார் பங்காளிகள், மாமன், மைத்துனர் அனைவராலும் **11-03-2021** மற்றும் **12-03-2021** ஆகிய நாட்களில் மஹா சிவராத்திரி படையல் விழா மிகச் சிறப்பாக கொண்டாடப்பட்டது. விழாவில் கலந்து கொண்ட அனைவரும் அருள்மிகு ஆண்டி கருப்பு பொன்னழகி அம்மன் அருள் பெற்றனர்.

மேலும் இவ்விழா அன்று பங்காளிகளுக்கிடையே தேர்தல் நடைபெற்று நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

**தலைவர்** : **திரு. ஜெயபிரகாஷ்,** சொக்கம்பட்டி.

**செயலாளர்** : **திரு. வாசுதேவன்,** நத்தம்.

**பொருளாளர்** : **திரு. இளங்கோவன்,** கோபால்பட்டி

**தகவல் : திரு வாசுதேவன், நத்தம்**

# மாசி மஹாசிவராத்திரி படையல் விழா

சொக்கம்பட்டி கமுகக்கூருடையார் ஆதப்ப செட்டியார் வகையறாக்களுக்குப் பாத்தியப்பட்ட அருள்மிகு நாகம்மாள் திருக்கோவிலில் 37-வது ஆண்டு மாசி மஹாசிவராத்திரி படையல் விழா 11-03-2021 வியாழக்கிழமை அன்று முதன்முறையாக திருவிளக்கு பூஜையுடன் சிறப்பாக நடைபெற்றது. முன்னதாக 09-03-2021 செவ்வாய்கிழமை அழகர் கோவிலில் தீர்த்தமாடல் மற்றும் 10-03-2021 அன்று புதன்கிழமை மங்களாம்பட்டி 18-ஆம் படி கருப்பருக்கு "சிறப்புக் கொடுத்தல்" ஆகிய நிகழ்ச்சிகள் சிறப்பாக நடைபெற்றன.

இவ்விழாக்களில் பங்காளிகள், உறவினர்கள், ஊர் பொதுமக்கள் பெரும் அளவில் கலந்து கொண்டு இறையருள் பெற்றார்கள்.

**தகவல்: திரு இரா. இளங்கோ, காரைக்குடி.**

## பொன்னமராவதி அருவியூர் வடக்குவளவு நகரத்தார் இளைஞர் பேரவை - புதிய நிர்வாகிகள்

பொன்னமராவதி அருவியூர் வடக்குவளவு நகரத்தார் இளைஞர் பேரவையின் 2021-24-ஆம் ஆண்டுக்கு தேர்ந்தெடுக்கப்பெற்ற புதிய நிர்வாகிகள் பதவி ஏற்புவிழா 15-01-2021 வெள்ளிக்கிழமை அன்று பொன்னமராவதி மங்கைநாயகர் மன்றத்தில் நடைபெற்றது.

### 2021-24 ஆண்டுக்குரிய புதிய நிர்வாகிகள்



**திரு. R. மணிகண்டன்**
தலைவர்



**திரு. S. சுரேஷ்**
செயலாளர்



**திரு. N. தண்டாயுதபாணி**
பொருளாளர்

**தகவல் : திரு. N. தண்டாயுதபாணி, பொன்னமராவதி**

தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள புதிய நிர்வாகிகளுக்கு வாழ்த்துக்கள்!

**- தலைவர் அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகம்**

## புதுமனை புகுவிழா

கோயமுத்தூர் சின்னவேடம்பட்டி எண்.11, அம்பிகை நகர் என்ற முகவரியில் நாவலூருடையார் திரு. **M.S. வயிரவன் செட்டியார் - திருமதி. கிருஷ்ணவேணி** ஆச்சி இவர்களின் **V.K. இல்லம் புதுமனை புகுவிழா 24-02-2021 புதன்கிழமை** அன்று நடைபெற்றது.

இவ்விழாவில் உறவினர்களும், நண்பர்களும், பெரியோர்களும் திரளாக கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

**தகவல்: திருவாளர்கள் V.முத்துக்குமார் & V. அசோக்குமார், கோவை.**

# யாருடன் இருக்கின்றோம் என்பது முக்கியம்

காலை எழுந்தது முதல் நாம் நம்முடைய நேரத்தை பலவிதமான செயல்களில் ஈடுபட்டு செலவழிக்கின்றோம் என்பது தவிர்க்க முடியாத ஒன்று. இருப்பினும் நாம் ஒரு சிலர் முன் வந்து அமர்ந்து அவரது செயல்களைக் கவனித்திருந்தால் வாழ்க்கையில் சில பாடங்களை கற்றிருப்போம். **உதாரணமாக.....**

◎ 10 நிமிடம் வீட்டைப் பேணும் மனைவி முன் உட்காருங்கள்!
வாழ்க்கை எவ்வளவு கடினம் என்பதை உணர்வீர்கள்!

◎ 10 நிமிடம் ஒரு குடிகாரன் முன் உட்காருங்கள்!
வாழ்க்கை எவ்வளவு சுலபமானது என்பதை உணர்வீர்கள்!

◎ 10 நிமிடம் சாதுக்கள் மற்றும் சந்நியாசி முன் உட்காருங்கள்! கையில் உள்ளவற்றையெல்லாம் தர்மகாரியங்களுக்கு தானம் செய்யனும் போல உணர்வீர்கள்!

◎ 10 நிமிடம் ஒரு தலைவர் முன் உட்காருங்கள்!
உங்கள் எல்லா படிப்பும் பயனற்றது என்பதை உணர்வீர்கள்!

◎ 10 நிமிடம் ஆயுள் காப்பீட்டு முகவர் முன் உட்காருங்கள்!
இறந்து போனாலும் நல்லது என்பதை உணர்வீர்கள்!

◎ 10 நிமிடம் வியாபாரிகள் முன் உட்காருங்கள்!
நீங்கள் சம்பாதிப்பது மிகவும்குறைவு என்பதை உணர்வீர்கள்!

◎ 10 நிமிடம் விஞ்ஞானிகள் முன் உட்காருங்கள்!
நீங்கள் எவ்வளவு அறியாமையில் உள்ளீர்கள் என்பதை உணர்வீர்கள்!

◎ 10 நிமிடம் நல்ல ஆசிரியர்கள் முன் உட்காருங்கள்!
நீங்கள் மீண்டும் மாணவனாக வேண்டும் என்ற ஆசை வருவதை உணர்வீர்கள்!

◎ 10 நிமிடம் விவசாயி அல்லது தொழிலாளி முன் உட்காருங்கள்! நீங்கள் இதுவரை கடினமாக உழைக்கவில்லை என்பதை உணர்வீர்கள்!

◎ 10 நிமிடம் ஒரு ராணுவ வீரன் முன் உட்காருங்கள்!
உங்களுடைய சேவைகளும் தியாகங்களும் மிகக் குறைவானது என்பதை உணர்வீர்கள்!

◎ 10 நிமிடம் நல்ல நண்பன் முன் உட்காருங்கள்!
உங்கள் வாழ்க்கையே சொர்க்கமாக உணர்வீர்கள்! - குரல்ஆசிரியர்

# 2019-2020ல் பெருந்தொகை வழங்கிய நன்கொடையாளர்கள்

**மாபெருங்கொடை வள்ளல்கள் :**

1. திரு. **A.P. ஸேதுராமன் - விஜயலட்சுமி,** கோவை.
2. திரு. **செல்வன் R.M. செந்தில்,** பொன்.புதுப்பட்டி.
3. திரு. **சொ. இராமநாதன் - சிவசக்தி** (செம்பதி) துபாய்.
4. திரு. **இராம. சூரியா சொக்கலிங்கம், - மகாலட்சுமி**
   திரு. **இராம. ஆதித்யா சொக்கலிங்கம்,** துபாய் (செம்பதி)

**பெருங்கொடை வள்ளல்கள் :**

1. திரு. **சொ. வைத்திலிங்கம் செட்டியார் - பாப்பா ஆச்சி,** மதுரை.

**கொடை வள்ளல்கள் :**

1. திருமதி. **இராம. லதா அவர்கள்,** நத்தம்.
2. திரு. **து. அரவிந்த் குமார் B.E., M.S., - பத்மா B.E.,** சென்னை.
3. தெய்வத்திரு. **STKR. சக்திவேல் - ராஜலெட்சுமி,** பொன்னமராவதி.

**வள்ளல்கள் :**

1. திரு. **M. பாலகிருஷ்ணன் - பானுமதி ஆச்சி,** சிங்கம்புணரி.
2. திரு. **செ. ஆசை அலங்காரம் குடும்பத்தார்,** சிறுகுடி.
3. திரு. **M.S. முருகப்பன்,** பொன்னமராவதி.
4. திரு. **சொ. முருகேசன் - கவிதா,** சிவகாசி.
5. திரு. **மு. சதாசிவம் - சக்தீஸ்வரி,** தஞ்சாவூர்.
6. திரு. **A. முருகன் - செல்வமணி,** நீடாமங்கலம்.
7. திரு. **TMRS. சிவக்குமார் - அருணோதயம்,** கோவை.

**6-12 மாணவர்களுக்கு உதவித்தொகை வழங்கும் நன்கொடையாளர்கள்**

1. **சிங்கம்புணரி மீனாட்சி நல்லதம்பி வலச்சேரிப்பட்டி தெய்வானை வள்ளியப்பன்** நினைவாக அவந பொதுநலச்சங்கம், பிரான்மலை.
2. தெய்வத்திரு. **மு.அ. பரமசிவம் செட்டியார் - அங்கம்மாள் ஆச்சி** குடும்பத்தார், பொன்.புதுப்பட்டி.
3. திரு. **சொ. வைத்திலிங்கம் செட்டியார் - பாப்பா ஆச்சி** குடும்பத்தார், மதுரை.
4. திரு. **தே.மா. பழனிச்சாமி செட்டியார் - பழ. சரஸ்வதி ஆச்சி** குடும்பத்தார், பொன்.புதுப்பட்டி.
5. தெய்வத்திரு. **தீ.பழ. பொன்னுச்சாமி செட்டியார் - அன்னமயிலி ஆச்சி** நினைவாக **A.P. ஸேதுராமன் - விஜயலட்சுமி,** கோவை.

**தங்கப்பதக்கம் வழங்கும் நன்கொடையாளர்கள் : 10ஆம் வகுப்பு**

1. முதல் கல்விக்காவலர் **தெய்வத்திரு. வெ.ராம. சுப்பிரமணியன் செட்டியார் - அன்னபூரணி ஆச்சி** குடும்பத்தினர், சென்னை.
2. **அருவியூர் வடக்குவளவு நகரத்தார் சங்கம்,** கோவை.
3. திரு. **ஆ. ஆறுமுகம் - சாந்தி,** கோவை.

**12ஆம் வகுப்பு**

4. திரு. **அரு.சோம. சண்முகநாதன் - சிவகாமி,** தூத்துக்குடி.
5. திரு. **செ. இளவரசன் & திரு. நே. சரவணன்,** சென்னை.

# யோகாசன போட்டி வெற்றியாளர்

திண்டுக்கல் திரு. M.சரவணன் செட்டியார்- சுதா ஆச்சி தம்பதியரின் மகள் 8-ஆம் வகுப்பு படிக்கும் செல்வி ந. விஷாலி



28-03-2021 அன்று மாவட்ட அளவில் நடைபெற்ற ஆசன செய்முறை போட்டியில் கலந்து கொண்டு முதல் பரிசு பெற்றுள்ளார். கடந்த ஐந்து வருடங்களாக யோகாசனத்தில் பயிற்சி பெற்று வரும் இவர் மாவட்ட அளவிலும், மாநில அளவிலும் மற்றும் தேசிய அளவிலான போட்டிகளில் கலந்து கொண்டு பல பரிசுகள் பெற்றுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

**- தகவல்: திரு M. சரவணன், திண்டுக்கல்.**

## ஸ்ரீ மங்கைபாகர் தேனம்மை திருமண தகவல் மையம், கோவை

இலவச சேவை-கட்டணம் இல்லை. பதிவிடுங்கள்

சமூகப் பெருமக்களே! பெற்றோர்களே!

மணமகன்-மணமகள் தேவைக்கு உரிய விவரத்துடன் தபால் அனுப்புங்கள். வரிசைப்படி நம்பர் பதிவு செய்து பதிவேட்டில் விபரம் எழுதி விரைவில் திருமணம் கைகூட வழி காண்பிக்கிறோம். 18-07-2006-இல் தொடங்கிய இச்சேவையில் பதிவானது 495. இணைந்த தம்பதிகள் 374. காத்து இருப்பது ஆண் - 102, பெண் - 19, ஆக 121. பெண் பதிவு மிக மிக குறைவு. பெண்வீட்டார்கள் முன் வந்து பதிவு கொடுத்தால் சமூக இனம் பெருக சமூகம் வளரும். பெண் வீட்டார்கள் ஒத்துழைப்பு கொடுக்க வேண்டுகிறோம்.

சாமியாடி எஸ். ஜெகனாதன்<br>
நெ. 10 இ, அம்மன் கோவில் தோட்டம்,<br>
பஸ்நிலையம், வடவள்ளி,<br>
கோயமுத்தூர் - 641 041.<br>
செல் : 98948 37649

பி.எல்.ஆர். திருமுருகன் ஸ்டோர்ஸ்<br>
நெ. 18, எம்.கே.ஜி. லே அவுட்<br>
ITI பின்புறம் GN மில்<br>
கோயமுத்தூர் - 641 029.<br>
செல் : 99523 49855

குறிப்பு : நேரில் வந்து கலந்து பேசினால் உடன் திருமணம் கைகூட வாய்ப்பு அதிகம்.

உ

சிவமயம்

உடல் நலம் பேணுவோம்! உளம் மகிழ வாழ்வோம் !!

# கார்த்திக் மெடிக்கல்ஸ்

காந்திபார்க், கோவை

# காமாட்சி பார்மஸி



சுக்ரவார்பேட்டை, கோவை

செல் : 95144 52521



எல்லாவிதமான இங்கிலீஸ் மருந்துகளும் கிடைக்கும்

S. கிருஷ்ணசாமி<br>
K. பானுமதி

K. மீனாட்சி B.E.<br>
K. மோகனசுந்தரி B.E.<br>
K. கார்த்திக் B.Sc.,

# நம் உடலை வாழவைக்கும் வைட்டமின்கள்

குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை எல்லோருடைய உடல் வளர்ச்சிக்கும் சமச் சீரான வைட்டமின்கள் தேவை. இந்த வைட்டமின்கள் நிறைந்த உணவை சரியாக எடுத்துக் கொள்ளாவிட்டால் உடல் வளர்ச்சியில் பாதிப்பு ஏற்படும். நோய்களும் சொல்லாமல் கொள்ளாமல் வந்து ஒட்டிக் கொள்ளும் அதனால், என்ன வைட்டமின் குறைந்தால் என்ன நோய்வரும் எவற்றில் அந்த வைட்டமின்கள் உள்ளன என்பது பற்றி தெரிந்து கொள்வோம்.

**வைட்டமின் 'ஏ'**

இது குறைந்தால் கண்பார்வை மங்கும். நோய் எதிர்ப்பு சக்தி குறையும். கருப்பையில் கரு வளர்வதற்கும், பிறந்த குழந்தை ஆரோக்கியமாக வளரவும் இந்த வைட்டமின் தேவை. எலும்புகளும் பற்களும் வளர இதுதான் முக்கியக் காரணம். முருங்கைக் கீரை. பச்சைக் காய்கறிகள், வெண்ணெய், ஆகியவற்றில் வைட்டமின் 'ஏ' அதிகம் காணப்படுகிறது.

**வைட்டமின் 'பி'**

இந்த வைட்டமின் குறைந்தால் வயிறு மந்தமும், அஜீரணமும், ரத்த சோகையும் ஏற்படலாம். பக்கவாதம், இதயபாதிப்பு ஏற்படவும் சாத்தியக் கூறுகள் அதிகம். அத்துடன், வாயில் புண் உண்டாகும். கைக்குத்தல் அரிசி, காய்கறிகள், பப்பாளி ஆகியவற்றில் இந்த வைட்டமின் 'பி' அதிகம் உள்ளது.

**வைட்டமின் 'சி'**

இந்த வைட்டமின் குறைந்தவர்கள் மன அமைதி இழப்பர். மேலும் தோற்றத்தில் சிடுமூஞ்சியாக காணப்படுவர். எலும்புகள் பலம் குறையக்கூடும். பல் ஈறு வீங்கி பற்கள் ஆட்டம் காணலாம். பல் ஈறுகளில் ரத்தம் கசியும். தோலில் ரத்தப் போக்கு ஏற்படும். ஆரஞ்சுப் பழம், திராட்சை, சமைக்காத பச்சைக் காய்கறிகள், நெல்லிக்காய், எலுமிச்சை, தக்காளி, கொய்யா, உருளை, வெற்றிலை, பப்பாளி அகியவற்றில் வைட்டமின் 'சி' அதிகம் உள்ளது.

**வைட்டமின் 'டி'**

வைட்டமின் 'டி' இல்லாவிட்டால் எலும்புகள் வலுவிழந்து விடும். பற்கள் கெடக்கூடும். வைட்டமின் 'டி' போதிய அளவு இல்லாத குழந்தைகளின் கால்கள் வில் போல் வளைந்துவிடும். வயிறு ஊதும். போதுமான சூரிய வெளிச்சம் குழந்தைக்குக் கிடைத்தால் அதன் உடலே வைட்டமின் 'டி' யை தயாரித்துக் கொள்ளும். வெண்ணெயில் வைட்டமின் 'டி' அதிகம் உள்ளது.

**வைட்டமின் 'ஈ'**

இந்த வைட்டமின் குறைந்தால் தசைகள் பலவீனமடையும், மலட்டுத் தன்மையையும் உண்டாக்கும். கோதுமை, கீரை, பச்சைக் காய்கறிகளை அதிகம் சேர்த்தால் வைட்டமின் 'ஈ' சமச்சீர் விகிதத்தில் கிடைக்கும். அனைத்து வைட்டமின்களும் நம் உடல் ஆரோக்கியத்திற்கு தேவை. எனவே ஆரோக்கியமான உணவை தேர்ந்தெடுத்து உண்டு பழகுங்கள்.

**- சுப. செல்வம். குரல்ஆசிரியர்.**

# இரண்டாம் ஆண்டு

# நினைவு அஞ்சலி

தோற்றம்:
20-06-1939

மறைவு:
22-05-2019



**தெய்வத்திரு. Er. மு. சண்முகம் B.E., சிறுகுடி**

என்றும் நீங்கா நினைவுகளுடன்... **உங்கள் குடும்பத்தினர்**

முன்னாள் பொதுநலச் சங்கத் தலைவர் - 1999-2002

முன்னாள் கல்வி வளர்ச்சிக் கழகத் தலைவர் - 1983-86, 1989-93, 2006-2009

# மூன்றாம் ஆண்டு

# நினைவு அஞ்சலி



தெய்வத்திருமதி

## A. ரஞ்சிதம் ஆச்சி

தோற்றம்
19.08.1955
மறைவு
23.04.2018

உங்கள் நினைவில் என்றும் வாழும்

மகன் : **A. முத்துப்பழனி (எ) மகேந்திரன்**

மருமகள் : **M. ராஜலெட்சுமி** B.B.A., PGDCA

பேரன் : **M. ஏகப்பன்** பேத்தி: **M. ஏகாம்பாள்**

மணி பெட்டிக்கடை, பஸ்ட்பீட், காரைக்குடி

எங்களை எல்லாம் வளர்த்து ஆளாக்கி
இறைவனடி சேர விண்ணுலகம் சென்ற
எங்கள் பாசமிகு இதய தெய்வத்திற்கு
மூன்றாம் ஆண்டு நினைவு அஞ்சலி!



எங்கள் இதயதெய்வத்தின்

மூன்றாம் ஆண்டு

# நினைவஞ்சலி

**06.5.2021**



தெய்வத்திரு. **அ.ப.அங்கம்மாள் ஆச்சி**

*நீங்காத நினைவுகளுடன்*



## குடும்பத்தார்கள்

# கண்ணீர் அஞ்சலி

தோற்றம்
17.8.1981

மறைவு
10.04.2021



## தெய்வத்திருமதி தே. அன்பரசி ஆச்சி

கோவை அ.வ.ந. சங்கத்தின்
அறங்காவலர் **திரு. தேனிமலை நாகப்பன செட்டியார்**
அவர்களது மனைவி **திருமதி அன்பரசி ஆச்சி** அவர்கள்
**10-04-2021** அன்று அதிகாலை இறைவனடி சேர்ந்தார்

என்றும் உந்தன் நினைவுகளுடன்....
கணவர்: **திரு. தேனிமலை நாகப்பன செட்டியார்**
மற்றும் குடும்பத்தினர்

# கண்ணீர் அஞ்சலி



**தே. அன்பரசி ஆச்சி**



எங்கே சென்றாய்? அன்பே! நீ எங்கே சென்றாய்?
என்னில் உன்னை வைத்திருந்தேன் ஆயினும்
மருத்துவ மனையில் நானும் தங்கையும் நிற்கும் போதே
எங்களிடம் சொல்லாமல் சென்றாயே? இது நியாயமா?

அன்பான தாய் தந்தையை அண்ணன் தம்பியை
ஒரு கணம் நினைக்க ஏன் தவறினாய்? அன்பே!
உன் பாசப் பிள்ளைகளை விட்டு எங்கே சென்றாய் அன்பே!
உற்றார் உறவினர் கேட்க உன்னை தேடுகின்றேன் அன்பே!

நாங்களெல்லாம் பரிதவிக்க எங்கே நீ சென்றாய் அரசியே!
உன்னுடனே நானும் வர ஆசைதான் அன்பே!
நம் பாசப் பிள்ளைகளை ஆளாக்கி கரை சேர்த்திடவே
இப்பூ உலகில் தங்கிவிட்டேன் என் அன்பே!

என் உள்ளத்தை விட்டு என்றும் பிரியாத என் அன்பே!
என்றாவது ஒரு நாள் இவ் உலகை விட்டு நானும் வருவேன்
நாம் சந்திக்கும் அந்த நாள் நெருங்கி வரும் வரை
எனக்காக வழிமேல் விழிவைத்து காத்திருப்பாய் அன்பரசியே!

## உன் பிரிவால் வாடும்

**முரு. தேனம்மாள் ஆச்சி, முரு. தேனிமலை நாகப்பன்**
**தே. அரவிந்த், தே. அருணா**
**முரு. சேவுக மூர்த்தி, சே.சரண்யா, சே.அபர்ணா, சே.அபூர்வா**
**கோயமுத்தூர்.**

**சுப. அண்ணா செட்டியார் - A.மீனாம்பாள் ஆச்சி**
**SA.அன்புச் செல்வன், A.சத்யா, A.அன்பு மீனாள்,**
**A.அண்ணாமலை, A.அபினவ்**
**SA.அருண்குமார், A.திவ்யா, A.அருணாசலம், A.அஸ்வின்**
**பொன்னமராவதி.**



# நம் வாழ்க்கையை நமக்குப் பிடித்தது போல் எப்படி மாற்றுவது?

இந்தப் பூமியில் வாழும் மக்கள் தொகையில் சுமார் 90% மக்கள் அடிக்கடி தங்களுக்குள் கேட்டுக் கொள்ளும் ஒரு கேள்வி நம் வாழ்க்கையை எப்படி மாற்றுவது? இதற்கான பதில்களை தங்கள் அறிவின் வாயிலாக-அனுபவங்களின் வாயிலாக பலரும் பல வடிவங்களில், பல இடங்களில் பதிவு செய்துள்ளனர். தற்போதும் பலர் பதிவு செய்து வருகிறார்கள். இருந்தும் இந்தக் கேள்விக்கான பதில் பலருக்கும் முழுமையாகக் கிடைக்கவில்லை என்பது தான் உண்மை.

நம் வாழ்க்கையை நம்மால் மாற்ற முடியுமா? என்கிற கேள்விக்கு பதில் கிடைக்காமல் செல்லச் செல்ல, “என் வாழ்க்கையை என்னால் மாற்ற முடியாது. இது தான் என் வாழ்க்கை. இவ்வளவுதான் என்னால் முடியும்” என்கிற மனநிலைக்கு பலரும் வந்துவிடுகிறார்கள். ஒன்றைத் தெளிவாகப் புரிந்து கொள்ளுங்கள். **உண்மையில் நமது வாழ்க்கை, மாற்றங்கள் நிறைந்ததாகவே உள்ளது. ஆனால் நமக்குப் பிடித்த மாதிரியான மாற்றங்கள் நிகழவில்லை என்பது தான் உண்மை.**

நன்றாக சிந்தித்துப் பாருங்கள். நமது மன ரீதியான, உடல் ரீதியான, பொருளாதார ரீதியான மாற்றங்கள் அவ்வப்போது நடந்துகொண்டு தானே உள்ளது? அப்படி என்றால் ஏன் நமக்குப் பிடித்த மாதிரியான மாற்றங்கள் நம் வாழ்க்கையில் நிகழ்வதில்லை? இது தான் நாம் புரிந்து கொள்ள வேண்டிய உண்மையான கேள்வி. நமக்குப் பிடித்தமாதிரியான மாற்றங்கள் நம் வாழ்க்கையில் நிகழாமல் இருப்பதற்குக் காரணம் நமக்கு எது பிடிக்கும் என்கிற தெளிவே நம்மிடம் இல்லை என்பதுதான் காரணம். நமக்கு எது பிடிக்கும் என்பதே நமக்கு தெளிவாக தெரியவில்லை என்றால் நம்மால் அதை எப்படி அடைய முடியும்? நமக்குப் பிடித்த மாதிரியான மாற்றங்களை நம்மால் எப்பொழுது நம் வாழ்க்கையில் ஏற்படுத்த முடியும்? உண்மையில் உங்களுக்கு என்ன பிடிக்கும்? என்கிற கேள்வியை முன்வைத்தால், உண்மையில் எனக்கு என்ன பிடிக்கும் என்பதே எனக்குத் தெரியவில்லை

நான் என்ன செய்வது? அதை எப்படி நான் கண்டுபிடிப்பது? என்கிற கேள்விகளைத் தான் பலரும் முன்வைப்பர். இது ஒரு அடிப்படை உளவியல் சிக்கல். இதை நாம் மிகவும் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டும்.

நமக்கு இது தான் பிடிக்கும் என்று நம் மனம் கூறும். இல்லை, இல்லை நமக்கு இது தான் சரியாக இருக்கும் என்று நமது மூளை கூறும். இன்று நமக்குப் பிடித்த ஒன்று சில நாட்களுக்குப் பிறகு இது நமக்குத் தேவையற்றது என்று கருதி புதிதாக ஒன்றை விரும்பத் தொடங்கும். இப்படி ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு விதமாக, ஒவ்வொரு விருப்பமாக நமக்குப் பிடித்தது இதுவா? அதுவா? என்று மாறிக்கொண்டே இருக்கும். ஏனென்றால் நமக்கு அனைத்துமே வேண்டும் என்கிற சுயநலம் தான் காரணம். எல்லாமே வேண்டுமெனும் பேராசை தான் காரணம். எது சரியென புரிந்துகொள்ள முடியாத அறியாமை தான் காரணம்.

நமக்கு எது வருமோ? நமக்கு எது நல்லதோ? நமக்கு எது தேவையானதாக இருக்குமோ? எந்த ஒன்றால் நமது திறமைகளை வெளிப்படுத்த, வளர்த்துக் கொள்ள முடியுமோ? அந்த ஒன்று தான் நமக்குப் பிடித்த ஒன்றாக நம் வாழ்க்கையை மாற்றக்கூடிய ஒன்றாக இருக்கும். எந்த ஒன்று நமது வாழ்க்கை முழுவதும் நம்மைத் தொடர்ந்து வருமோ? அந்த ஒன்று தான் நம் வாழ்க்கையை மாற்றக் கூடியது. எந்த ஒன்று நமக்கும், நம்மை சுற்றி இருக்கும் மற்ற உயிர்களுக்கும் பயனுள்ளதாக இருக்குமோ? அந்த ஒன்றே நம் வாழ்க்கையை மாற்றக்கூடியது.

**எத்தனை காலங்கள் வீணாகிவிட்டது என்று வருந்தியது போதும். இனி ஒரு நொடியைக் கூட வீணாக்காமல் உங்கள் மனதை அமைதியாக வைத்துக் கொண்டு அந்த ஒன்றை மட்டும் தேடுங்கள்.** அந்த ஒன்றால் மட்டுமே அனைத்து விதமான மாற்றங்களும் நம் வாழ்க்கையில் நடைபெற உள்ளது. எனவே அந்தப் பொறுப்பை உணர்ந்து மிகவும் பொறுமையாக நிதானமாக உங்கள் இலக்கை தேர்ந்தெடுங்கள். அந்த ஒன்றைத் தேர்ந்தெடுங்கள். அதுவே வாழ்க்கையாக, வாழ்க்கை மாற்றங்களாக அமையும். அப்படி அதை அமைத்துக் கொண்டு வாழ்ந்து பாருங்கள்.

தினமும் 10 நிமிடங்கள் அமைதியாக உட்கார்ந்து எண்ணங்களைக் கவனிக்கவும். உங்களுக்கு ஆத்ம சந்தோஷம் கிடைக்கும் விசயங்களை யோசிக்கவும். திரும்ப திரும்ப அதையே எண்ணவும். கண்டிப்பாக ஒரு நாள் அதை அடைவீர்கள். விரும்பியதைச் செய்யவும். செய்வதை விரும்பிச் செய்யவும்.

உங்களுக்காக சில நேரம் சில நாட்கள் வாழ்ந்து விட்டுப் போகவும்.

உங்கள் உடல் மற்றும் மனத்திற்கு எது பிடிக்கிறதோ அதைச் செய்யுவும்.

இருக்கும்போது நாம் மகிழ்ச்சியாக இருந்துவிட்டு போவோம், நமக்கு பிடித்தமாதிரி.

நமக்குப் பிடித்தமாதிரி ஒரு நாள் வாழ்ந்தாலும் அது தான் ஆத்ம திருப்தி மற்றும் நம் வாழ்க்கை முழு அர்த்தமாக இருக்கும் என்பதில் எள்ளவும் சந்தேகம் இல்லை.

**- சுப. செல்வம், குரல் ஆசிரியர்**

# வாசகர் குரல்

**வாசகர் குரல்: 151-1**

கல்விக்காவலர் அம்மன்குறிச்சி தெய்வத்திருவாளர்கள் திரு. வெ.ராம. சுப்ரமணியன் செட்டியார்–அண்ணபூரணி ஆச்சி, கல்விக்காவலர் தெய்வத்திரு சு. துரைராசு செட்டியார், கல்வி வளர்ச்சிக் கழக செயலாளர் திரு சுப. செல்வம், சென்னை அரு.மணி செட்டியார், சுப. நேசமணி. சுப. திருஞானசம்பந்தம் இவர்களின் முயற்சியால், இராமேஸ்வரத்தில் அருவியூர் வடக்குவளவு நகரத்தார் விடுதி ஏற்படுத்திய திரு. சுபராஜகோபால் – ரேணுகா தம்பதியினரை மிக்க நன்றியுடன் பாராட்டுகிறேன்.

திருச்செந்தூரில் விடுதி, பழனியில் மடம் இருக்கின்ற மாதிரி இராமேஸ்வரத்தில் ஒரு விடுதி அமைய வேண்டும் என்று சங்கத்தில் சில நேரங்களில் சொல்லி இருக்கிறேன். இராமேஸ்வரத்தில் நம்மவருக்கு ஒரு விடுதி இல்லையே என்ற ஏக்கம் எனக்கு இருந்தது. இதனை பூர்த்தி செய்து கொடுத்த முதல் கல்விக்காவலர் குடும்பத்தாருக்கு எனது மனமார்ந்த நன்றியை தெரிவித்து பாராட்டுவதில் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். **– திரு P. சிவன்ஜோதி, தஞ்சை.**

**வாசகர் குரல் : 151-2**

உப்பு பற்றி என்ன என்ன நன்மைகளை செய்கிறது என்பது பற்றி தெளிவாக கட்டுரை எழுதிய செ. ஆனந்தசெல்வம், நங்கநல்லூர் குடும்பத்தினருக்கு மனதார பாராட்டுதலும் நன்றியும் தெரிவித்துக் கொள்கிறோம்.

**– திருமதி. S. மல்லிகா சிவன்ஜோதி, தஞ்சை.**

**வாசகர் குரல் : 151-3**

பெண்களுக்கு விழிப்புணர்ச்சி உண்டாக்கும் வகையில் விளக்கேற்ற உகந்த நேரம் பற்றி கட்டுரை எழுதி மனம் கவர்ந்த உள்ளங்களுக்கு பாராட்டுகிறேன்.

**– திருமதி S. மல்லிகா, P. சிவன்ஜோதி, தஞ்சை**

**வாசகர் குரல் : 151-4**

கல்வித்தாய்-தந்தை திட்டம் மீண்டும் தொடங்கியிருப்பது மிக்க மகிழ்ச்சி. இத்திட்டம் கல்விப் பணிக்கு உதவுவதோடு பெற்றோருக்கும் பெருமை தேடித்தர பிள்ளைகளுக்கு ஒரு நல்ல வாய்ப்பாகும்.

பொதுநலச் சங்கத்திலும், கல்வி வளர்ச்சிக் கழகத்திலும் பொறுப்பேற்றுள்ள புதிய நிர்வாகிகள் தங்களின் முன் அனுபவத்தாலும் நிர்வாகத் திறமையாலும், தேசிய செட்டியார் பேரவையின் வழிகாட்டுதலோடும், நம் இன மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்ந்த நிலைக்கு எடுத்துச் செல்வார்கள் என்பது உறுதி.

சைவப் புலவர் அவர்களின் இளையான்குடி மாறநாயனாரின் வரலாறு பக்தியோடும், இலக்கிய நயத்தோடும், சொந்த அனுபவக் கருத்துக்களோடும் இணைந்து மனதில் நன்கு பதியும்படி இருந்தது.

ஊஞ்சல் ஆடுவதால் கிடைக்கும் உடல் மற்றும் மன மகிழ்ச்சியை அனைவரும் அனுபவிக்கத் தூண்டியது ஆனந்த லெட்சுமி அவர்களின் ஊஞ்சல் கட்டுரை. திருமதி பொன்னழகு அவர்களின் தலைவாசல் கட்டுரையின் மூலம் நாம் பின்பற்ற வேண்டிய புதிய விஷயங்களைத் தெரிந்து கொண்டோம். திரு. சுப. இராஜகோபால் தனது மிகச் சிறந்த முதலீட்டின் மூலம் நல்ல விஷயங்களை ஞாபகப்படுத்தியுள்ளார்.

புத்தகம் 2-இல் குரல் ஆசிரியர் திரு. சுப. செல்வம் அவர்கள் உடற்பயிற்சிக்கு மாற்றாக.. இருவகைப் பஞ்சாங்கங்கள் ஜோதிடம் பார்க்கலாமா... சாப்பிடும்முறை... தூங்குவதற்கு முன் குளிப்பது... சேமிப்பின் முக்கியத்துவம் போன்ற பல கட்டுரைகளின் மூலம் தெளிவான, பயனுள்ள உண்மைகளைத் தேடித் தேடி நமக்கு உணர்த்தியுள்ளார். மனமார்ந்த நன்றி.

அனைத்துப் படைப்புகளும் பயனுள்ளவையாகவும், மீண்டும் மீண்டும் படிக்கத் தூண்டுவதாகவும் இருந்தன. அடுத்த இதழை ஆவலுடன் எதிர்பார்க்கிறோம்.

**- சூரியகலா குமார், புதுக்கோட்டை.**

உடல்நலம்

# டென்ஷனைக் குறைக்க நடை தியானம்

இன்றைய வாழ்க்கையில் டென்ஷன் என்பது மிகவும் சாதாரணமான ஒன்றாகி விட்டது. யாருக்குத்தான் டென்ஷன் இல்லை என்கிறார்கள். அதிகாலையில் ஆரம்பித்து இரவு படுக்கையில் சாயும் வரை டென்ஷன் தான்; தூக்கத்தில் கூட ஆழமும், அமைதியும் இல்லை. மறுபடி காலை ஆரம்பிக்கிற நாளில் முந்தைய நாளின் டென்ஷனும் சேர்ந்து கொள்கிறது. இப்படி சேர்ந்து கொண்டே போகும் டென்ஷன் கோபமாய், கத்தலாய், வியாதியாய், வெறுப்பாய் பல ரூபங்கள் எடுத்து நமக்கு உள்ள சிக்கல்களை மேலும் அதிகப்படுத்தி விடுகிறது.

ஒரு சிலர் எங்கேயாவது ஓடிப் போய் விடலாமா என்று தோன்றுகிறது என்று புலம்புவது உண்டு. ஓடிப் போனாலும் அங்கும் நமக்கு முன்னால் டென்ஷன் நின்று கொண்டே காத்திருக்கும். அப்படியானால் என்ன தான் வழி என்றால் அதற்கு மாமருந்து தியானம் தான்.

தியானத்தில் பல நூற்றுக் கணக்கான முறைகள் இருக்கின்றன. எல்லாமே உயர்ந்தவை தான் என்றாலும் பெரும்பாலான தியானங்கள் ஓரிடத்தில் அமைதியாக அமர்வதில் இருந்து ஆரம்பிக்கின்றன. அப்படிப்பட்ட தியானங்கள் பலருக்கு கைகூடுவதில்லை. சிலரால் சில நிமிடங்கள் சேர்ந்தாற் போல அமர்ந்திருக்க முடிவதில்லை. முடிந்தவர்களிலும் சிலர் அப்படியே உறங்கி விடுவதும் உண்டு. அவர்களுக்கெல்லாம் இந்த நடை தியானம் மிகவும் பயன்படும். இதை முதலில் உருவாக்கியவர் ‘திச் நாட் ஹான்’ என்கிற வியட்நாமிய புத்த துறவி. பின்னர் அந்த நடை தியானம் சில கூட்டல் கழித்தல்களுடன் பலரால் பல அவதாரங்கள் எடுத்தது. இதைத் தொடர்ந்து 21 நாட்கள் செய்ய முடிந்தால் கண்டிப்பாக நீங்கள் பெரும் மாற்றத்தை உங்களிடத்தில் காண்பீர்கள் என்பதை உறுதியாகக் கூற முடியும். இது மிகவும் எளிமையானது.

**நடை தியானம் செய்யும் முறை :**

1. முதலில் அதிக நெரிசலோ, கூட்டமோ இல்லாத அமைதியான பாதை ஒன்றைத் தேர்ந்தெடுங்கள். எவ்வளவுக் கெவ்வளவு வாகன, மக்கள் போக்குவரத்து குறைவாக இருக்கிறதோ அந்தப் பாதை சிறந்தது.
2. காலை அல்லது மாலை அல்லது இரவு நேரங்கள் உத்தமம். ஆனால் தேர்ந்தெடுத்த பின் தொடர்ந்து அதே வேளையில் நடை தியானத்தை தினமும் செய்வது நல்லது.
3. நடக்கையில் கூட துணைக்கு ஒருவர் இருப்பதை தியானம் கை கூடும் வரை தவிர்ப்பது நல்லது. செல்போன் இருந்தால் அதை நிறுத்தி வையுங்கள்.
4. நடக்க ஆரம்பிக்கும் முன் சிறிது அமைதியாக நில்லுங்கள். முதலில் உங்கள் உடலுடன் தொடர்பு கொள்ளுங்கள். இயந்திரத்தனமாக வாழ ஆரம்பித்து விட்ட நாம் பெரும்பாலான நேரங்களில் நம் உடலின் சின்னச் சின்ன உணர்வுகளைக் கூட உணர்வதில்லை. மூச்சை மூக்கு வழியாக ஆழமாக உள்ளிழுத்து மெள்ள வெளிவிடுங்கள். மூச்சுக் காற்று உங்கள் உடலில் பயணம் செய்வதை உணருங்கள். காலடியில் செருப்பின் ஸ்பரிசம், வெளியே வீசும் காற்று, வெயில் சீதோஷ்ணம் உங்கள் உடலைத் தொடும் விதம் போன்றவற்றை கண்களை மூடிக்கொண்டு அனுபவியுங்கள்.
5. மூன்று முறை முன்பு சொன்னது போல் மூச்சு விட்டு விட்டு நடக்க ஆரம்பியுங்கள். நிதானமாக நடக்க அரம்பித்த பின் இயல்பாக சீராக ஒரே வேகத்தில் நடந்து செல்லுங்கள். மூச்சையும் இயல்பாக விட்டால் போதும். ஆனால் உங்கள் கவனம் எல்லாம் நீங்கள் விடும் மூச்சில் இருக்கட்டும். நடக்க நடக்க உங்கள் மூச்சு தானாக ஆழம்படும்.
6. நடக்கையில் உங்கள் மூச்சில் மட்டுமே உங்கள் கவனம் இருக்கட்டும் மனம் ஆயிரத்தெட்டு விஷயங்களை அவசரமாக உங்களுக்குச் சொல்ல ஆசைப்படும். அதற்கு

இடம் கொடுக்காதீர்கள். மனம் மூச்சில் இருந்து வேறு விஷயங்களுக்குச் சஞ்சரிக்கும் போது அமைதியாக அதை மறுபடி மூச்சுக்கே கொண்டு வாருங்கள். திரும்ப திரும்ப அது அலையும், சலிக்காமல் அதை உங்கள் மூச்சுக்கே கொண்டு வாருங்கள். சிறிது சிறிதாக மனம் தாவும் வேகம் குறைந்து போகும். மனம் அமைதியடைய ஆரம்பிக்கும்.

7. நீங்கள் சீராக மூச்சு விட்டபடி தாளத்தோடு அடியெடுத்து வைத்து நடக்க ஆரம்பித்தவுடன் பிரபஞ்சத்தின் எல்லையற்ற சக்திகளை மூச்சுக் காற்றோடு அமைதியாக உங்களுக்குள் இழுத்துக் கொள்வதாகக் கற்பனை செய்து கொள்ளுங்கள். உங்களுக்குள் இருக்கும் நோய்க்கிருமிகளையும் டென்ஷனையும், பலவீனங்களையும் வெளிமூச்சு வழியாக வெளியே விடுவதாகக் கற்பனை செய்து கொள்ளுங்கள்.
8. சுமார் பதினைந்து நிமிடங்களாவது இப்படிக் கற்பனையோடு மூச்சு விட்டு நடந்தீர்களானால் சிறிது சிறிதாக உங்களுக்குள் அமைதியும் சக்தியும் பெருகுவதை நீங்கள் உணர்வீர்கள்.
9. நீங்கள் உங்கள் நடை தியானத்தின் முடிவுக்கு வரும்போது மறுபடி உங்கள் நடையின் வேகத்தைக் குறைத்துக் கொண்டே வந்து நிறுத்துங்கள்.

அவ்வளவுதான். இதைத் தினந்தோறும் செய்ய அரை மணி நேரத்திற்கு மேல் நமக்குத் தேவைப்படாது. ஆனால் தொடர்ந்து செய்தால் மன அமைதி, உடல் நலம் இரண்டிலும் நல்ல முன்னேற்றத்தைப் பார்க்கலாம். நீங்களும் முயற்சி செய்து பார்க்கலாமே. **- சுப.செல்வம் குரல் ஆசிரியர்.**

**அச்சிட்டோர் : சூர்யா பிரிண்ட் சொலூசன்ஸ்**
534 -ஏ, காமராஜர் சாலை, சிவகாசி - 626123.
போன்:04562-223315 இ.மெயில் suryaprint1998@gmail.com

# குலதெய்வ வழிபாடு



சிவகங்கை மாவட்டம், திருப்பத்தூர் வட்டம் கோட்டையிருப்பு கிராமத்தில் அருள்பாலிக்கும் ஸ்ரீ மருத ஐயனார் சுவாமியை குலதெய்வமாகக் கொண்ட அ.வ.ந. பாக்குமூருடையார் பங்காளிகள் **21.02.2021 ஞாயிற்றுக்கிழமை** அன்று சிறப்பு அபிஷேகம் மற்றும் ஆராதனை செய்து வழிபட்டனர். இவ்வழிபாட்டில் பங்காளிகளுடன் பிறந்த மக்கள், மாமன் மைத்துனர்கள் திரளாக கலந்து கொண்டு இறைஅருள் பெற்றனர்.

**தகவல் : திரு.சொ. செந்தில்குமார். பொன்னமராவதி**

**செல் : 99524 62777**

# சிவபாதம் சேர்ந்தார்கள்

பாதம்பர மன்னவர் சூழ்ந்து, பணிந்து போற்ற
ஏதம் பிணியா வகை, இவ்வுலகு ஆண்டு, தொண்டின்
பேதம் புரியா அருள் பேரரசு ஆளப் பெற்று,
நாதன் கழல் சேவடி நண்ணினார் அண்ணலாரே.

- திருமுறை

பூசாரிபட்டி திரு சேது செட்டியார்-விஜயரெத்தினம் மகள் கலைச்செல்வி 18-04-21 ஞாயிற்றுக்கிழமை அன்று இறைவனடி சேர்ந்தார். - தகவல்: திரு S. சுரேஷ், திண்டுக்கல்



முன்னாள் சென்னை அவந சங்க செயலாளரும் பொன்னமராவதி, பூக்குடி வீதி திரு.நா. திருநாவுக்கரசு செட்டியார் அவர்களின் மகனுமான திரு. **T. சரவணன்** 07-05-2021 அன்று இறைவனடி சேர்ந்தார்.

தகவல் - திரு.நா.திருநாவுக்கரசு நல்லாசிரியர். பொன்னமராவதி



பூர்வீகம் கிருங்காக்கோட்டை, கோவை மதுக்கரையில் வசித்துவரும் திரு. **V. ஆறுமுகம்** செட்டியார் அவர்கள் 03-05-2021 அன்று இறைவனடி சேர்ந்தார்கள்.

தகவல்: வாட்ஸ் அப் செய்தி



நத்தம் திரு. **தி. குணசேகரன்** செட்டியார் அவர்கள் 01-04-2021 அன்று இறைவனடி சேர்ந்தார்கள்.

தகவல்: திரு.கு விஜயன் நத்தம்



கம்பிளியம்பட்டி முன்னாள் ஊராட்சி மன்ற தலைவர் திரு. M. **கணேசன்** அவர்கள் இயற்கை எய்தினார். இவரது இறுதி ஊர்வலம் 28-04-2021 அன்று நடை பெற்றது.

தகவல் : மீனாட்சி பேங்கர்ஸ், கம்பிளியம்பட்டி

பூர்வீகம் குளத்துப்பட்டி, தற்போது கோவையில் வசித்து வரும் திரு.கரு.பாஸ்கரன் செட்டியார் மற்றும் திரு. ராமனாதன் செட்டியார் இவர்களது தகப்பனார் **திரு.கருப்பையா செட்டியார்** அவர்கள் 05-05-2021 அன்று இறைவனடி சேர்ந்தார்கள்.

தகவல்: அ.வ.ந. சங்கம்/இளைஞர் பேரவை, கோவை



கோவை அ.வ.ந. சங்கத்தின் அறங்காவலர் திரு தேனிமலை நாகப்பன செட்டியார் அவர்களது மனைவி **திருமதி. அன்பரசி ஆச்சி** அவர்கள் 10-04-2021 அன்று அதிகாலை இறைவனடி சேர்ந்தார்.

- தகவல். அவந சங்கம் கோவை.



கிருங்காக்கோட்டை அ.வ.ந. சங்கத் தலைவர் **திரு. சிகு. மகாதேவன்** அவர்கள் 10.05.2021 அன்று பிரான்மலையில் இறைவனடி சேர்ந்தார்கள்.

தகவல்: வாட்ஸ்அப் செய்தி

கல்லம்பட்டி **திரு. து. அருணாசலம்** செட்டியார் அவர்கள் 10-05-2021 அன்று இறைவனடி சேர்ந்தார்கள்.

தகவல்: வாட்ஸ்அப் செய்தி

மதுரை **A.** அசோகன் மற்றும் சிறுகுடி **A.** சேகர் & கண்ணன் இவர்களின் தந்தையார் **திரு. அலங்காரம்** செட்டியார் அவர்கள் 23-05-2021 அன்று இறைவனடி சேர்ந்தார்கள்.

தகவல்: திரு A. அசோகன், மதுரை



பொன்னமராவதி சந்திரா சவுண்ட் சர்வீஸ் திரு PM. ராமநாதன் செட்டியார்-மீனாம்பாள் ஆச்சி இவர்களின் மூத்த மகள் RM. **மரகதம் ஆச்சி** அவர்கள் 22-05-2021 அன்று இறைவனடி சேர்ந்தார்கள். - தகவல்: வாட்ஸ்அப் செய்தி



சென்னை கே.கே. நகர் விநாயகா மெடிக்கல்ஸ் உரிமையாளர் திரு இயலரசன் அவர்களின் தகப்பனாருமான புதூர் திரு. M.A.M. **மாணிக்கவேலு** செட்டியார் அவர்கள் 10-05-2021 அன்று சென்னையில் இறைவனடி சேர்ந்தார்கள்.

- தகவல்: திரு சேதுராமன்



வ.புதூர் திரு. **ராஜேந்திரன்** செட்டியார் அவர்கள் 26-05-2021 அன்று இறைவனடி சேர்ந்தார்கள்.

- - தகவல் **R.**ராஜ்குமார் புதூர்



பொய்யாமணிப்பட்டி திரு. SM. தங்கராஜ் செட்டியார் அவர்கள் 24.5.2021 அன்று சேலத்தில் இறைவனடி சேர்ந்தார்கள்.

- தகவல் த.சுரேஷ் கோயமுத்தூர்.



சிங்கம்புணரி **திரு. மகாலிங்கம்** செட்டியார் அவர்கள் 19.5.2021 அன்று சிங்கம்புணரியில் இறைவனடி சேர்ந்தார்கள்.

- தகவல் வாட்ஸ்அப் செய்தி.



மேலூருடையார் பங்காளிகள் பூசாரி **திரு. தேனப்ப செட்டியார்** அவர்கள் 02-06-2021 அன்று கோயமுத்தூர் வடவள்ளியில் இறைவனடி சேர்ந்தார்கள்.

**தங்களது உறவுகளை இழந்து தவிக்கும் குடும்பத்தினருக்கு ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறோம்**
**- கல்வி வளர்ச்சிக் கழக நிர்வாகிகள்.**

# 48 நாள் ஒரு மண்டலம்
# அறிவியல் பார்வை

சித்த வைத்தியர்கள் மருந்துகளை ஒரு மண்டலம் சாப்பிட்டு வாருங்கள் என்று சொல்வார்கள். திருக்கோவில்களில் கும்பாபிஷேகத்திற்கு பின்னர் 48 நாட்களுக்கு பிறகு மண்டல அபிஷேகம் செய்வார்கள். இப்படி நம் முன்னோர்கள் ஆன்மிகத்திலும் வழக்கத்திலும் ஒரு மண்டலம் என்று சொல்வதை அறிவியல் மூலமும் உணரலாம். இதை எப்படி என்று சற்று விரிவாக பார்ப்போம்.

சூரியனிலிருந்து வெளிப்படும் கதிர்வீச்சுக்கள் சூரிய ஒளியாக நம்மைத் தொடுவதை நாம் ஏற்றுக் கொள்கிறோம் அல்லவா? அது போலத் தான், நம் பூமியைச் சுற்றிலும் உள்ள கோள்கள், நட்சத்திர கூட்டங்கள் இவற்றிலிருந்து வெளிப்படும் கதிர் வீச்சுக்களும் நம் மேல் விழுகின்றன.

அறிவியல் பூர்வமான சூரியனின் புற ஊதா கதிர்கள் நம் மீது படுவதால் ஏற்படும் பாதிப்புகளையும், அதே நேரத்தில் சூரிய ஒளியின் மூலம் தான் அனைத்து உயிர்களும் பயன் பெற்று வாழ்கின்றன என்பதை நாம் ஏற்றுக்கொள்கிறோம் அல்லவா? அதே போல்தான் நம்மைச் சுற்றிலும் உள்ள கோள்களின் மற்றும் நட்சத்திர கூட்டங்களின் கதிர் வீச்சுக்களும் நம் மீது தொடர்பு கொண்டுள்ளன என்பதை நாம் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

என்ன, அவை இருக்கும் தூரத்தின் காரணமாகவும், அவற்றின் உருவ வேறுபாடு காரணமாகவும் அவை வெளியிடும் கதிர் வீச்சுக்களின் ஒளி சூரியனின் ஒளியைப்போல் நம் கண்களுக்குத் தெரிவதில்லை. இப்படி நம்மை வந்தடையும் கதிர்வீச்சு ஒளிகளுக்குச் சொந்தமான நட்சத்திர கூட்டங்களையும, மற்றும் கோள்களையும் 12 ராசி நட்சத்திர கூட்டங்களாகவும், 27 நட்சத்திர கூட்டங்களாகவும் மற்றும் 9 கோள்களாகவும் நம் முன்னோர்கள் கண்டுபிடித்து அதை வகைப்படுத்தி வைத்துள்ளனர்.

நாம் அன்றாடம் பயன்படுத்தும் தினசரி காலண்டரில் அந்த நாள் ஒரு குறிப்பிட்ட நட்சத்திரத்துக்கு மற்றும் ஒரு குறிப்பிட்ட

ராசிக்கு உரியது என்று கொடுக்கப்பட்டிருப்பதை நாம் பார்க்கிறோம் அல்லவா? அது போல வார நாட்களிலும் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு கிரகத்திற்கு உரியது என்பதை அதன் பெயர்களை கொண்டே நாம் அறியலாம்.

ஒரு வருடத்தின் எந்த நாளை எடுத்துக் கொண்டாலும் சரி அன்றிலிருந்து தொடங்கி சரியாக 48 நாட்களுக்குள் 9 கிரகங்கள், ராசிக்கூட்டங்கள் மற்றும் நட்சத்திரக் கூட்டங்கள் இவைகளுடைய கதிர்வீச்சு ஆதிக்கம் பெற்ற அத்தனை நாட்களும் கணக்கில் வந்துவிடும். எப்படி என்பதை பார்ப்போம்: கிரகங்கள் 9, ராசி கூட்டங்கள் 12, நட்சத்திர கூட்டங்கள் 27, ஆகிய இந்த மூன்றையும் கூட்டிப் பாருங்கள் 9+12+27=48.

எப்படி சூரியனின் கதிர்வீச்சு-ஒளி இல்லாமல் உலகில் விவசாயமும் இன்னும் பல விசயங்களும் செய்ய முடியாதோ, அதேபோல் இந்த மூன்று கூட்டமைப்புகளின் மூலம் வெளிப்படும் கதிர்வீச்சுகளின் ஒளியும் நாம் நம்பினாலும் நம்பாவிட்டாலும் நம் மீது பரவி நம்முடைய செயல்களுக்கு காரணமாக இருக்கின்றது என்பது அறிவியல் சார்ந்த உண்மை.

எனவே தான், தொடர்ந்து 48 நாட்கள் (ஒரு மண்டலம்) செய்யும் எந்த ஒரு செயலும் மேலும் மேலும் தொடர்ந்து வெற்றிகரமாக நடக்கின்றன. இதனால் தான் சித்த மருத்துவத்தில் கூட எந்த ஒரு இயற்கை மருந்தையும் ஒரு மண்டலம் சாப்பிடச் சொல்லுவார்கள். அப்படிச் செய்தால் அந்த நோய் நிரந்தரமாக குணமாகும். அதே போல் எந்த மதத்தினை சேர்ந்தவராய் இருந்தாலும், தொடர்ந்து 48 நாட்கள் செய்யும் வேண்டுதல்களும், மற்றவர்களுக்கு தீமைகள் இல்லாத செயல்களும் கை கூடுகின்றன. நம்முடைய முன்னோர்களான சித்தர்களும், முனிவர்களும் வெற்றுச் சாமியார்கள் அல்ல. அவர்கள் மிகச் சிறந்த அறிவியலாளர்கள். இன்னும் சந்தேகமா? ஏதாவது ஒரு செயலையோ அல்லது வேண்டுதலையோ 48 நாட்கள் நம்பிக்கையோடு ஒரு முறை செய்து தான் பாருங்களேன்... ஆன்மிக அறிவியல் உண்மை விளங்கும்....

**- திருமதி. ஆனந்த செல்வம், நங்கநல்லூர், சென்னை.**




**Book Post - Printed Matter**

**To**

**From**

அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகம்
3, முதல் குறுக்குத் தெரு,
அழகப்பா காம்ப்ளக்ஸ் பின்புறம்,
மெயின்ரோடு ரோடு, **பொன்னமராவதி,**
புதுக்கோட்டை மாவட்டம் - 622 407.

SURYA SVK Cell : 98421 24415